

• ராஜராஜேஸ்வரி டவரில் குண்டு வெடித்தபோது...

# கோவை நகரமா? வெடிகுண்டு நகரமா?



• முதல்வர், மூப்பனார் வருகை...

அந்த நாட்களில் கிழக்கிலிருந்து மேற்காக விரையும் சூரியன்கூட கோவை பூமியைக் கண்டு கொஞ்சம் அச்சத்துடன் வேகமாகவே விரைவதாகப் பட்டது. சூரியனே கண்ணைப் பொத்திக் கொள்ளும் அளவுக்கு ஒரே புகை மண்டலம்...

“இந்து முன்னணித் தொண்டர்கள்

— கனத்த இதயத்தோடு ஒரு நேரடி ரிப்போர்ட்

கல்கி இன்டர்நெட் முகவரி: www.kalkiweekly.com ஈ மெயில்: kalki@md2.vsnl.net.in




• ஆர்.வி. ஹோட்டல் அருகே......



• குண்டு வெடித்தபின் ராஜராஜேஸ்வரி டவர்....

அடுத்தடுத்துக் கொலையுண்ட பின்பும்கூட முஸ்லீம் தீவிரவாதிகளின் மீது எந்த நடவடிக்கையும் பெரிதாக எடுத்து விடவில்லை. காவல் துறையின் அணுகுமுறை கூட கேஸ் போடுவதோடு நின்று விட்டது. இதுவே படிப்படியாக வளர்ந்து 'அல்-உம்மா' உருவாக வழி செய்தது. தி.மு.க. வெற்றி பெற்றால் (கடந்த தேர்தலில்) தடா கைதிகளை (அல்-உம்மாவினர்) விடுதலை செய்வதாகத் தேர்தல் பிரசாரம் செய்தவர்கள், தி.மு.க 'லீடிங்' என்றதுமே (1996) பாதுகாப்பாய் இருந்த ஒரேயொரு போலீஸ் 'செக்போஸ்ட்'டையும் அடித்து நொறுக்கினர். இப்போது தஞ்சாவூரில் பாம்... அதற்கு முன்னர் எல்லா ஊர்களிலும்... சமுதாயத்தில் உள்ள இத்தகைய பெருங் குற்றங்களை மறைப்பதன் மூலம் அவர்கள் இந்தச் சமுதாயத்திற்கு தீங்கிழைக்கக் கூடியவர்கள்...!''

– இப்படி கோவை பி.ஜே.பி. வேட்பாளர் சி.பி. ராதா கிருஷ்ணன் 'பிரஸ் கிளப்'பில் பேசி (13.2.98 மாலை 5 மணி) சரியாக 24 மணி நேரம் கூட ஆகவில்லை. கோவை நகரமே குண்டுகளால் நடுங்க ஆரம்பித்து விட்டது.

வெடித்த குண்டுகள் எத்தனை என்று அறுதியிட்டு யாராலும் சொல்லவியலவில்லை. வைத்த குண்டுகள் – வீசின குண்டுகள் – கைப்பற்றப்பட்ட குண்டுகள் – செயலிழக்கச் செய்த குண்டுகள் – செயலிழக்கச் செய்யவியலாது பாதுகாப்பான இடத்தில் வெடிக்கச் செய்த குண்டுகள் – என குண்டுகளின் பட்டியல் நீளுகிறது.

''ஆர்.எஸ்.புரத்தில் அத்வானி பேச இருந்த மேடைக்கு 400 அடி தூரத்தில் காதே வெடிக்கிற மாதிரி ஒரு குண்டு வெடித்தது சார். நாங்க ஏதோ ட்ரான்ஸ்ஃபார்மர் வெடித்தது என நினைத்தோம். அப்புறம் 3.50 மணிக்கு மேடைக்குத் தெற்குப் பகுதியில் பெரிய வெடிச் சத்தம். அப்பவே கை தனியா, கால் தனியா... நிறைய பேர்... ஒரே புகை மண்டலம்... அங்கிருந்து தப்பிப் பொழைச்க ஓடி வர்றோம். காந்திபுரம்

ஆர்.வி. ஓட்டல்ஸ் பின்னாடி வெடிச்சத்தம். அதுக்குப் பின்னால காந்திபுரம் ராஜ ராஜேஸ்வரி டவர்...அப்புறம் கோவை மருத்துவக் கல்லூரி மருத்துவமனை, அந்தராபுரம் எஸ்.கே. டவர், கடைவீதி ராஜேந்திரா டெக்ஸ்டைல்ஸ், ரயில்வே ஸ்டேஷன்னு அடுக்கடுக்கா தகவல் வருது... அத்வானிஜி தெய்வாதீனமா தப்பிச்சிருக்கார்னுதான் சொல்லணும்... இருந்தாலும் அவர் ஜி.ஹெச் போயிட்டுதான் திருச்சி போனார்....!"

– நம்மிடம் தொலைபேசியில் இது சம்பந்தமாய் முதலில் பேசியவர் பி.ஜே.பி.யைச் சேர்ந்த கே.எஸ். நடராஜன்

கோவை நகரமே இதன் பின்னணியில் இருண்டு போனது. 32, 35, 45, 52 என சாவு எண்ணிக்கை ஏறிக் கொண்டேயிருக்க, படுகாயம், காயமுற்றவர்களின் எண்ணிக்கையும் 100, 200 என்று ஏறிக் கொண்டேயிருந்தது.

"ட்ரெயினீ நர்ஸுங்க சார்... ட்யூட்டி முடிச்சுப் போறவங்க... ஆர்.எஸ்.புரத்துல, காந்திபுரத்துல, சுந்தராபுரத்துல எல்லாம் குண்டு வெடிச்சு இறந்தவங்க, காயமடைந்தவங்கன்னு வரிசையா வந்துட்டேயிருக்கு... இந்த நிலையில உடனே வீட்டுக்குப் போறது தப்புன்னு, சேவை மனப்பான்மையோட அவங்களுக்குச் சிகிச்சையளிக்க, வந்த நர்ஸுங்க... அடுத்த குண்டு வெடிச்சது அவங்க சிகிச்சையளிக்கப் போன இடத்துல. ரத்தம் சொட்டச் சொட்ட அங்கேயே ஒரு நர்ஸ் காலி. ஐந்து பேர் படுகாயம்... நினைக்கவே பயங்கரமா இருக்கு...!"

– நாம் போனபோது எதிர்ப்பட்ட சிலர் வேதனையோடு கூறினார்கள்.

தேர்தல் பிரசாரத்தை ரத்து செய்து விட்டு மறுநாள் ஓடோடி வந்த முதல்வரிடம் கூடி நின்ற பெண்களும், குழந்தைகளும், ஆண்களும் முறையிட்டது, "ஒரு லட்சம் கொடு... இரண்டு லட்சம் கொடுங்க" என்றல்ல... "பாடியை எப்பத் தருவீங்க...?" என்றுதான்.

ஜி.எச். வந்த முதல்வர் அப்படியே ஆடிப் போய் விட்டார். அதுவும் தங்கள் உயிருக்குப் பாதுகாப்பு வேண்டும் என்று ட்ரெயினீ நர்ஸ்களும், டாக்டர்களும், மருத்துவமனை ஊழியர்களும் கதறியழுதது கண்டு 'அப்செட்' ஆகி விட்டார் என்றுதான் சொல்ல வேண்டும். யாரிடமும் எந்த ஒரு வார்த்தையும் பேசாத முதல்வரின் கண்களில் வடிந்த நீரையும், சோக பிம்பத்தையும் நம்மால் பார்க்க முடிந்தது.



• அரசு மருத்துவமனையில்....

கடந்த டிசம்பர் கலவரத்தின்போது நேரில் வந்து பார்க்காத மனிதர் இப்போது வந்து பார்ப்பதற்குக் காரணம் தேர்தல் என்று ஒரு பக்கம் விமர்சனம் எழுந்தாலும் அவர் வந்ததற்குத் 'தேர்தல் பிரசாரத்தில் கடுமையாகச் சாடும் 'ஜெ'யின் போக்கு' என்கின்றனர் பலரும்.

"சும்மாவே... அந்தம்மா 'தைய்யா தக்கா' எனக் குதிக்கிறார். 'கோவையில் கலவரம்...

வந்தாரா கருணாநிதி? பாதிக்கப்பட்டவருக்கு ஆறுதல் கூறினாரா...' என்றெல்லாம் கூட்டத்திற்குக் கூட்டம் கேள்வி கேட்கும் அவருக்கு, இப்போது நல்ல 'அவல்' கிடைத்து விட்டது!" என்றார் ஒரு பிரமுகர்.

முதல்வர் வந்த வேகத்தில் இறந்தவர் குடும்பத்திற்கு தலா இரண்டு லட்சம் கொடுக்கச் சொல்லி அறிவித்தார். மாவட்ட தி.மு.க. நிர்வாகிகளை, அமைச்சரை, வேட்பாளரை என்ன சொன்னாரோ (கடிந்தாரோ) தெரியவில்லை. உடனடியாக தி.மு.க கூட்டணியின் அனைத்துக் கட்சிக் கூட்டத்தை கோவை மாவட்ட சி.பி.எம். அலுவலகத்தில் கூட்டி, கலவரப் பின்னணியில் தேர்தலை எப்படி எதிர்கொள்வது என்று கலந்தாலோசித்தனர்.



" இது பல்பொருள் அங்காடிதானே...?"

"இருக்கலாம்: அதுக்காக இங்க வந்து பல்செட் விலைக்குக் கேட்டா எப்படி...?"

— தில்லை என்.எஸ்.

"யுத்த காலத்தில்கூட எதிரிகள் மருத்துவமனைகளின் மீது குண்டு போட மாட்டார்கள். அதையும் மிஞ்சின படுபாதக... மனிதாபிமானமற்ற செயல்...!" என்று முதல்வர் சொன்னது எவ்வளவு உண்மை என்பது நாம் மருத்துவமனை வளாகத்தைச் சுற்றிப் பார்த்தபோது உணர முடிந்தது.

குண்டு வெடித்த மூன்றாம் நாள் கோவை மருத்துவக் கல்லூரி மருத்துவமனையை நாம் சுற்றி வந்தபோது, அந்த வளாகமே வெறிச்சோடிக் கிடந்தது. அங்கொன்றும் இங்கொன்றுமாய்ச் சில போலீஸார்... நிறைந்த கவலையுடன், அதையும் மிஞ்சின பயத்துடன் சில நோயாளிகள். அவர்களைப் பார்க்க வரும் பார்வையாளர்கள்... அனைவரின் கண்களிலும் பீதி.

"சண்டாளனுகளா... எவனுக்குமே எடங் கெடைக்கலையா... ஆஸ்பத்திரிய நம்பி வர்ற ஜனங்களுக்கே வெடி வச்சவனுக விளங்குவானுகளா...?"

"கட்டடமே... இந்தப் பாடுபட்டிருக்கே... உள்ளே இருக்கிற மனுஷனுக என்ன பாடுபட்டிருப்பாங்க..."

– எதிர்ப்படும் பலவித அங்கலாய்ப்புக் குரல்கள்...

கே.ஜி மருத்துவமனையின் தீவிர சிகிச்சைப் பிரிவில் சிகிச்சை பெற்று வரும் ஆர். ஜெயராஜுக்கு நாம் சந்தித்ததற்கு முன் தினம்தான் நினைவு திரும்பியிருந்தது.

"அத்வானி மீட்டிங் பார்க்கப் போயிருந்தேன். வண்டிய (ஸ்கூட்டரை) எடுத்துட்டுப் புறப்படும்போது பக்கத்துலேயே வெடிச்சது. எம் பொண்ணுக்கும், எம் மனைவிக்கும் என்ன ஆச்சு...? சொ...ல்...லுங்க...!"

– வெறும் மூச்சாய் வார்த்தைகளை உதிர்த்தபோது, நம்மால் எதுவும் பதில் பேச முடியவில்லை. காரணம் அவர்கள் இருவரும் 'ஸ்பாட்டிலேயே' இறந்து விட்டதாக நமக்குத் தகவல் தெரிந்திருந்ததுதான்.

உக்கடத்தில் தன் சகோதரி வீட்டுக்குப் போனபோது வெடிகுண்டுக்கு மாட்டின சம்சுதீன், சுந்தராபுரத்தில் டீ சாப்பிட்டுக் கொண்டிருந்த ரவி (எஸ்.பி டவர் வெடிகுண்டு பாதிப்பு) தொடர்ந்து 14, 15, 16, 17 வயதேயான பிரபு, மதன் சக்ரவர்த்தி, சுரேஷ் குமார், செந்தில்குமார் (மேடைக்கருகில் வெடித்த குண்டில் பாதித்தவர்கள்) என யாவருக்கும் தாங்கள் வெடிகுண்டால் பாதிக்கப்பட்டதற்கும் தங்கள் கண்முன் சிலர் சிதைந்து இறந்ததற்கும் என்ன காரணம் என்றே தெரியவில்லை.

குற்றவாளிக்குக் கூட தான் தண்டிக்கப் படுவதற்கான காரணம் இதுதான் என்பது தெரிந்து விடும். தன்னைத் தானே சமாதானப் படுத்திக் கொள்ள சில காரணங்கள் இருக்கும். ஆனால் இவர்களுக்கு...

சுந்தராபுரம் எஸ்.பி. டவரில் குண்டு வெடித்தபோது முதுகில் ஏதோ யூனிஃபார்ம் தீய்ஞ்ச மாதிரிதான் உணர்ந்தாராம், சிறப்புப் போலீஸ்காரரான கோவிந்தராஜ். 29 வயதான இந்த போலீஸ்காரருக்குத் திருமணமாகி ஒரு வருடம்; குழந்தை பிறந்து இருபது நாட்கள்தான் ஆகிறதாம். தாம் தப்பியதும், பெண்டாட்டி புள்ளையைப் பார்க்கக் கொடுத்து வைத்திருப்பதும் அந்தக் கடவுள் செயல் என்றார். அடிபட்டதும் இவரை நேரே ஜி.எச்.சுக்குத்தான் கொண்டு வந்திருக்கிறார்கள். இவரைக் கொண்டு போன நேரம் ஜி.எச்சிலும் குண்டு வெடிக்க நேரே இங்கே கொண்டு வந்திருக்கின்றனர். இதே ஆஸ்

பிடலில் குண்டுகள் பதுக்கி வைத்திருந்த தீவிரவாதிகளைப் பிடிக்கப் போன போலீஸாரும் (கோவை - டவுன்ஹால் - வெரைட்டி ஹால் ரோடு திருமால் வீதியில்) தம் உடம்புகளில் வெடி மருந்துச் சிதறல்களால் தாக்குண்டு சிகிச்சை பெற்றுக் கொண்டிருக்கின்றனர்.

''என்னதான் திறமை என்று கூறிக் கொண்டாலும்... அவர்கள் வைத்திருந்த ஆயுதம்... பாலிதின் பேக் பிரித்து வைத்திருந்த வெடிகுண்டுகள்... வெடி மருந்துகள் மத்தியில் நாங்கள் 'ஜம்ப்' செய்து தப்பித்தது தெய்வாதீனம் என்றுதான் சொல்ல வேண்டும்...!''

- கமிஷனர் உட்பட ஒரு போலீஸ் படையே முற்றுகையிட்ட தீவிரவாதக் கும்பலை நேர் எதிரே சந்தித்த எஸ்.ஐ ஒருவர், தமது உடல் வலியையும் மறந்து நம்மிடம் மிக அடக்கத்துடன் கூறிய வரிகள் இவை.

இந்த மருத்துவமனையில் படுத்திருந்த (குண்டு வெடிப்பில் பாதித்தவர்கள்) பெரும்பாலானவர்கள் ஏழைகள்; அன்றாடங் காய்ச்சிகள். அதிலும் அந்த 14, 15, 16, 17 வயதுச் சிறுவர்கள் வெறும் கூலிக்காகக் கூட்சிக் கூட்டத்திற்குக் கூட்டி வரப் பட்டவர்களாம்!

''இவர்களுக்கு மருத்துவச் செலவுகள் எப்படி...? அரசு உதவிகள் ஏதாவது...? இறந்தவர்களுக்கு 2 லட்சம் என அறிவித்து விட்டுச் சென்ற முதல்வர், இதற்கு ஏதாவது...?'' இக் கேள்வியை கே.ஜி. மருத்துவமனை தலைமை மருத்துவர் டாக்டர் ஜி. பக்த வத்சலத்திடம் கேட்டோம்.

''அரசு உதவி மட்டுமல்ல, அரசாங்க உயர் அதிகாரிகள்கூட இதுவரை வரவில்லை. என்றாலும் வேண்டிய உதவி செய்கிறோம்; கொடுக்கிறோம் என்று தெரிவித்து இருக்கிறார்கள். ஆனால் நாங்கள் எந்தப் பிரதிபலனும் பார்க்காமல்தான் அவசரத் தேவையையுணர்ந்து சேவையாகவே செய்கிறோம். எங்கள் டாக்டர்களும், பணியாளர்களும் இரவு பகல் பாராது உழைப்பதே ஒரு சமூகப் பார்வையோடுதான்!'' என்றார்.

இதற்கெல்லாம்... இந்தக் குரூரத்திற்கெல்லாம் பின்னணி யார்...?

டிசம்பரில் பாதிப்படைந்த முஸ்லீம் சிறுபான்மையினருக்கு ஆதரவாய் எழுந்த தீவிரவாதப் போக்கின் பழி வாங்கும் முயற்சி என்கின்றனர் ஒரு சாரார். யாருமே புக முடியாத - இதற்குள் இன்னதுதான் இருக்கும் என யூகிக்கக்கூட முடியாத அளவு இருண்ட ஏரியாவாக இருக்கும் 'கோட்டைமேடு' (முஸ்லீம்கள் வசிக்கும் பகுதி) பகுதியை போலீஸார் துப்புரவு செய்தாலே இதன் பின்னணி தெரியும் என்கின்றனர் சிலர். ஆனால் அங்கிருக்கும் பல முஸ்லீம்களோ இனி இந்த பூமியில் வாழவே முடியாது என்கிற மாதிரி புறப்பட்டு ரயிலடியில் காத்திருப்பதாய் - போய் விட்டதாய்த் தகவல்கள்! அவர்கள் இப்படி வெளியேறவும் ஏதாவது ஒரு காரணம் இருக்கும் என பூடகமாய்ச் சிலர்.

''கோட்டைமேடு பகுதி, போலீஸ் நுழையக் கூட முடியாத அளவில் உள்ளது... அதைச் சரிப்படுத்த அரசு நடவடிக்கை எடுக்குமா...?'' என்று கோவை வந்த முதல்வரிடம் நிருபர்கள் கேட்டபோது, ''இனி இந்த நிலையைத் தொடர விட மாட்டோம்!'' என பதிலளித்தார்.

அதற்கு முன்னாலேயே 'அல்-உம்மா' 'ஜிகாத் கமிட்டி' ஆகியவற்றைத் தடை செய்யப்பட்ட இயக்கமாக அரசு அறிவித்ததுதான் முடங்கிக் கிடந்த போலீஸாரை வலிமையாக இயங்க வைத்துள்ளது. அதுவே அந்த தீவிரவாதக் கும்பலை முற்றுகையிடுவதற்கும், வெடி மருந்துகளைக் கைப்பற்றுவதற்கும் அழிப்பதற்கும் ஏதுவாக அமைந்திருக்கிறது. இதை முந்தைய கலவரத்தின் போதே அரசு செய்திருந்தால் இத்தனை உயிர்ப்பலிகளுக்கும், நடைமுறைச் சிக்கல்களுக்கும் இடமளித்திருக்காதே என்பதுதான் பலரது ஆதங்கமும்!

கட்டுரை, படங்கள்: **கா.சு. வேலாயுதன்**



''பத்திரிகையைப் பார்த்து அல்வா கிண்டினா இந்தத் தொல்லை தாங்க.''

''என்னாச்சு?''

''அல்வா கிண்டுறது எப்படின்னு எழுதினவங்க, பாத்திரத்தை விட்டு எப்படி எடுக்கிறதுன்னு எழுதலையே!''

— சீர்காழி வி. ரேவதி



## காதில் விழுந்தவை :

# ரஜினி பேட்டியும் முரசொலியின் தடுமாற்றமும்!

● கோவையில் தொடர் குண்டுகள் வெடித்துக் கொண்டிருந்தபோது கலைஞர், மூப்பனார் மற்றும் ஆளும் கூட்டணித் தலைவர்கள் சிந்தாதரிப்பேட்டையில் முதல் கட்ட வாக்குப் பதிவுக்கு முந்தைய கடைசிப் பிரசாரக் கூட்டத்தில் பேசிக் கொண்டிருந்தார்கள். மாலை நான்கரை மணி வாக்கில் மேடையில் இருந்த மாறனுக்குத்தான் 'செல்' போன் மூலம் முதல் தகவல் வந்தது. முகம் மாறியது. அந்தத் தகவல் ஆற்காட்டாருக்குச் சொல்லப் பட "இந்த அதிர்ச்சியான செய்தியை முதல்வரிடம் நான் சொல்ல மாட்டேன்" என்று பின் வாங்கினார் அவர். பின்னர் முதல்வரின் உதவியாளர் சண்முகநாதனும் 'ஷாக்' செய்தியை முதல்வரிடம் சொல்வதற்கு யோசிக்க, கடைசியில் கமிஷனர் காளிமுத்துதான் முதல்வரிடம் விஷயத்தைச் சொன்னாராம். செய்தியைக் கேட்டவுடன் அதிர்ச்சியடைந்த முதல்வர், அங்கிருந்து நேரடியாகக் கோட்டைக்கு வண்டியை விடச் சொல்லி விட்டார்.

● சென்னை அண்ணா சாலை பகுதியில் தாயார் சாகிப் தெரு அருகில் கொஞ்சம் நெருக்கடியான ஏரியாவில் இருந்தது அல் உம்மா அலுவலகம். இப்போது அல் உம்மாவைத் தடை செய்து விட்டதால், அந்தப் பகுதியிலுள்ள அமைதியை விரும்பும் இஸ்லாமியர்கள் நிம்மதிப் பெருமூச்சு விட்டுக் கொண்டிருக்கிறார்கள். வெளியூர்களைச் சேர்ந்த சந்தேகத்துக்கிடமானவர்கள் வருவதும் போவதுமாக இருந்தது இந்த இடம். இவர்களால் மத நல்லிணக்கத்துக்கும் இந்த இடத்தின் அமைதிக்கும் என்றைக்கு ஊறு நேரப் போகிறதோ என்று கவலைப் பட்டுக் கொண்டு இருந்தோம். இதைத் தவிர அந்தப் பகுதி பள்ளி வாசலில் தொழும் போது, பாரம்பரியமாகச் செய்து வரும் வழிமுறைகளுக்கு மாறாக, சில புது முறைகளை அறிமுகப் படுத்தினார்கள். இதனால் வேறு லோக்கல் முஸ்லிம்கள் கொஞ்சம் அப்செட் ஆனார்கள். நல்ல வேளையாக அரசு இயக்கத்தை தடை செய்து விட்டது!" என்றார் அந்தப் பகுதி இஸ்லாமிய இளைஞர் ஒருவர்.

● கோவை குண்டு வெடிப்பு காரணமாக காவல் துறையில் இரு பிரிவுகளிடையே இப்போது 'யார் பொறுப்பு?' என்பதில் மோதல் துவங்கியிருக்கிறது. ரகசிய புலனாய்வுப் பிரிவு "கோயம்புத்தூரில் உள்ள நிலைமையை, முன் கூட்டியே லோக்கல் போலீஸுக்கு எடுத்துச் சொல்லி, தக்க நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும் என்றும் சொல்லி விட்டதாக பொறுப்பைத் தட்டிக் கழிக்கிறது. கோவையிலுள்ள லோக்கல் போலீஸோ, "அவர்கள் சொல்லி விட்டால் போதுமா; ஸ்பாட்டில் என்ன நிலைமை என்று எங்களுக்குத் தெரியுமே!" என்று அரசியல் காரணங்களைச் சொல்லி ஜகா வாங்கியதாம். காவல்துறையில் ஒன்றுபட்டதொரு நடவடிக்கை இல்லாததும் நிலைமை மோசமானதற்குக் காரணம் என்கிறார்கள்.

● முதல் கட்ட வாக்குப் பதிவுக்கு முன்னர் நடந்த குண்டு வெடிப்பால், அ.தி.மு.க.-பா.ஜ.க. கூட்டணிக்கு மேலும் ஆதரவு பெருகும் என்பது அந்தக் கூட்டணித் தொண்டர்களின் கணிப்பாக இருந்தது. ஆனால் தேர்தலுக்கு முதல் நாள் வந்திறங்கிய ரஜினி தமது தொலைக்காட்சி பேட்டியின் மூலம் தி.மு.க.-த.மா.கா அணிக்குக் கொஞ்சம் வலிமையை ஊட்டினார். இதனால் அ.தி.மு.க.-பா.ஜ.க.வினர் அதிர்ச்சியடைந்தார்கள். இப்போது பா.ஜ.க.வும், அ.தி.மு.க. தொண்டர்களும் ரஜினிக்கு செல்வாக்கு கிடையாது; அவருக்கு ஒன்றும் தெரியாது; மன்றங்கள் கலைப்பு, என்றெல்லாம் பேசி வதந்திகளைப் பரப்பி வருகிறார்கள். இவர்களுக்கு ஆதரவாக தமிழ் காலைப் பத்திரிகை ஒன்று செயல்பட்டுக் கொண்டிருக்கிறதாம். ரஜினி பத்திரிகையாளர் சந்திப்பு முடிந்து வெளி வந்ததும் அந்தக் குறிப்பிட்ட பத்திரிகையின் நிருபர், 'சே... ஏமாத்திட்டான்யா!' என்று பெருமூச்சு விட்டாராம். இது இப்படியிருக்க, தி.மு.க. வட்டாரத்தில் 'மீண்டும் ஒரு குண்டு வெடிப்புச் சம்பவம் நடந்தால் கலைஞரே ராஜினாமா செய்து விடுவார்' என்று ரஜினி சொன்னதை ஜீரணிக்க சிரமப்படுகிறார்கள். இது பற்றி கட்சிப் பத்திரிகையான முரசொலி 'ராஜினாமா செய்து விடுவார்' என்ற ரஜினியின் வார்த்தைகளைப் பயன்படுத்தாமல் "எப்படி முடிவெடுக்க வேண்டும் என்று அவருக்கு (கலைஞருக்குத்) தெரியும்" என்று பேட்டியைச் சிறிது மாற்றி வெளியிட்டிருந்தது! இது எப்படியிருக்கு! ○

– தில்லப்பா



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்

16, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
சென்னை-600 063. தொலைபேசி:**2376129**



# ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர்! வணக்கம்

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த ஒன்பது ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய், தந்தையற்ற, வசதியற்ற, திக்கற்ற 50 மாணவர்களும் 20 மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை, மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன் உணவு , உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு நல்ல முறையில் வளர்த்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே, தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியை செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| காலை சிற்றுண்டி (70 பேருக்கு) | ரூ. | 500/- |
| மதிய உணவு (இனிப்புடன்) | ரூ. | 1,000/- |
| இரவு சிற்றுண்டி | ரூ. | 750/- |
| இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 300/- |
| ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித் தொகை | ரூ. | 1,000/- |
| ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ | 6,000/- |
| குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 40,000/- |

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக் கொள்கிறோம்..

உங்கள் நன்கொடைகளை "ஸ்ரீ சாரதா சக்தி பீடம்" என்ற பெயருக்கு Cheque/ DD/MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

இறைவன் தொண்டில்,
சுவாமி சர்வாத்மானந்தர்.

# கோலிவுட் மசாலா!



நண்பர்கள் என்றால் போதும்; கார்த்திக்கின் மனது பாகாய் இளகிவிடும். இப்படி நண்பர்கள் படம் இயக்க உதவிய கார்த்திக், இப்போது தமது இளகிய மனது பற்றி மறு பரிசீலனை செய்து கொண்டிருக்கிறார். இந்த மறுபரிசீலனையின் முடிவு வெளிவரப் போகிற 'சுந்தர பாண்டியன்' படத்தைப் பொறுத்தது. இந்த நிலையில் நடிகர் தியாகு, ''நான் ஒரு படம் தயாரிக்கிறேன். நீதான் அதற்குக் கால் ஷீட் கொடுத்து உதவ வேண்டும் என்று கார்த்திக்கிடம் நட்பு முறையில் வேண்டிக் கொண்டிருக்கிறார்!

திரைப்படக் கல்லூரியில் ஒளிப்பதிவு படித்த செல்வாவுக்குக் கிடைத்த வாய்ப்பு நடிப்பதற்கே! வந்ததை எதற்காக விட வேண்டுமென்று நடித்துக் கொண்டிருந்தவர், இப்போது டைரக்ஷனில் குதித்து விட்டார்! படத்தின் பெயர், 'கோல்மால்'. 'ஆயிரம் பொய் சொல்லிக் கூட ஒரு கல்யாணம் பண்ணலாம்' என்கிற தென்பில் ஒரேயொரு பொய் சொல்லி மாட்டிக் கொண்ட நான்கு இளைஞர்களின் சின்னச் சின்ன கோல்மால்கள்தான் கதை. இந்தப் படத்துக்கு அண்ணன் டைரக்டர் ராஜசேகரோ, முன்னாள்

• சுவாதி



• மோனிகா நெருக்கர்

அமைச்சரான தமது மாமியாரோ சத்தியமாய்ப் ஃபைனான்ஸ் செய்யவில்லையாம். எல்லாம் நண்பர்களின் கூட்டுறவு தானாம். படத்தில் ஒரு கவர்ச்சி வேணுமே என்பதற்காக மும்பை மாடல் மோனிகா நெருக்கரை இறக்குமதி செய்திருக்கிறார் செல்வா!

அப்படியும் இப்படியுமாக ஆடிக் கொண்டிருக்கிற அப்பாஸின் மார்க்கெட்டை ஸ்டெடியாக்கப் போவது 'ஜாலி' படம்தான் என்று கோடம்பாக்கத்தில் பேசிக் கொள்கிறார்கள். கல்லூரிக் கலாட்டாக்கள்தான் ஜாலி என்றாலும் எதையும் நெகடிவாகக் காட்டப் போவதில்லையாம். எல்லாமே பாசிடிவ்! லெக்சரராய் குஷ்பு. அப்பாஸுக்கு ஜோடியாய் கௌசல்யாவும் கீர்த்தி ரெட்டியும். கிராமத்துப் பெண் கேரக்டர் என்பதாலேயே இரண்டு படங்களை உதறித் தள்ளிவிட்டு இதற்குக் கால்ஷீட் கரம் நீட்டியிருக்கிறாராம் கீர்த்தி ரெட்டி.

தெலுங்கில் சக்கைப் போடு போட்ட 'பெல்லி சந்தடி'தான் தமிழில் 'நினைத்தேன் வந்தாய்' என்று வரவிருக்கிறது. கதை என்ன தெரியுமா? நாயகன் விஜய் கனவில் ஒரு தேவதை. விழித்துப் பார்த்தால் முகம் நினைவில்லை. ஆனாலும் தொப்புளில் உள்ள மச்சம் மட்டும் பசுமரத்தாணி போல் நினைவிருக்கிறது. அப்படியொரு பெண்ணைத் தேடுதேடென்று தேடுகிறார் விஜய்! கடைசியில் அவள் கிடைக்காமல் பெண் பார்த்து நிச்சயம் செய்து விட்டு வந்த பிறகு, அந்தப் பெண்ணும் மச்சம் உள்ள பெண்ணும் அக்கா - தங்கைகள்தான் என்பது தெரியவர.... "படம் முழுவதும் நகைச்சுவைதான்!" என்கிறார் டைரக்டர் செல்வ பாரதி. அக்கா - தங்கையாக தேவயானியும் ரம்பாவும்! தமிழ் சினிமா திரைக்கதைக்குத்தான் 'மச்சமே' இல்லை!

படத்தில் ஒரேயொரு டான்ஸ் மட்டும் ஆடி விட்டுப் போகும் நாயகிகள் வரிசையில் இப்போது சுவாதியும்! 'துள்ளித் திரிந்த காலம்' படத்தில் இப்படித்தான் ஆட வருகிறார் சுவாதி. முதலில் இந்தத் துக்கடாவுக்கெல்லாம் சம்மதிக்க முடியாது என்று ஆணித்தரமாக மறுத்தவர், இது கே. பாலசந்தர் தயாரிக்கும் படம் என்பதால்தான் ஒப்புக் கொண்டாராம். ●

— மஹாந்த்

**கடந்த நவம்பர் 16-ல் வெடி விபத்தில் சிக்கின திருச்சூர் (கேரளா) 'கொக்கலா' கிடங்கிலிருந்து தமிழகத்திற்கு — குறிப்பாகக் கோவை தீவிரவாதிகளுக்கு லாரிகளில் ஏராளமான வெடி மருந்துகள் (ஜெலட்டின்) சப்ளை செய்யப்பட்டதாகவும் — செய்யப்படுவதாகவும், அதுகுறித்து கேரள போலீஸ் நமது தமிழக போலீஸுக்கு முன் எச்சரிக்கை செய்தும் இவர்கள் மெத்தனமாக இருந்து விட்டதன் விளைவே இந்த குண்டு வெடிப்புகளிலும், உயிர்ப் பலிகளிலும் முடிந்து விட்டது எனவும் புதுப்புதுத் தகவல்கள்... இதன் பின்னணியில் உண்மை நிலை அறிய திருச்சூர் விரைந்தோம்...**

# திருச்சூரிலிருந்து

'கொக்கலா கிடங்கு' என்றாலே எந்த 'கோடவுன்' என்றுதான் கேட்கின்றனர் திருச்சூர் வாசிகள். நகரின் மையத்தில் நெரிசலான பகுதிகளிலேயே மூலைக்கு மூலை வெடி மருந்துக் கிடங்குகள். அதனால் எந்தக் கிடங்கு என்பதில் சின்னக் குழப்பம். 'நவம்பர் 16-ல் வெடித்ததே' என்றதும் கிடங்கு உள்ள வெல்லியனூர் எனும் அந்த இடத்திற்குக் கொண்டு போய் இறக்கி விட்டு, 'ஏனோ' அவசரமாய் விலகிப் போனார் ஆட்டோக்காரர். சிதைந்து, உருத்தெரியாது, கருகி குட்டிச்சுவராய்க் கிடக்கும் அந்தக் 'கொக்கலா கிடங்கு' பற்றிக் கேட்டாலே எல்லோரும் உறுத்துப் பார்க்கின்றனர். 'ஏன்', 'எதற்கு...?' 'நீங்கள் யாராணு...?' 'போலீஸா.... சி.ஐ.டி.யா...?' என பல கேள்விகள்...!

'படிக்காலா பாம் ஓர்க்ஸ்' என்ற பெயரில் இயங்கி வந்த இந்தக் கிடங்கு + கம்பெனி விழாக் காலங்களுக்கான, வாண வேடிக்கை, பட்டாசுகள், பாறை உடைப்புக்கான வெடிமருந்துகள் தயாரிப்பதாக மட்டும்தான் நம்பி வந்திருக்கின்றனர் சுற்றுப்புறவாசிகள் (கெமிக்கல் ஏஜென்ஸி உரிமம் பெற்ற இதன் உரிமையாளர் எப்படி 'பாம் ஓர்க்ஸ்' நடத்தினார் என்பதே பலரது கேள்வி). கடந்த நவம்பரில் – நள்ளிரவில் – யாரும் வேலையில் ஈடுபடாத நேரத்தில் இக்கிடங்கு வெடித்துச் சிதறவும்தான் (சுமார் 10 ஏக்கர் சுற்றுப்புறம்) வலுத்தது சந்தேகம். அத்தோடு இதன் அதிபர் 'படிக்காலா ஜோனி....' கம்பெனி ஆரம்பித்த நான்கு வருடத்தில் பெருங்கோடீஸ்வரரான சங்கதியும் சேர்ந்து கொண்டது.

கிடங்கு இப்போதிருக்கும் நிலையில் தற்சமயம் இங்கிருந்து வெடிமருந்துகள் சப்ளையாகியிருக்கச் சாத்யமில்லை (இங்கு டயர் தயார் செய்யப்படுவதாகக் கூறினார் கரிக்கட்டைகளுக்குக் காவலிருந்த வாட்ச்மேன் ஒருவர்). என்றாலும் இக் கம்பெனி அதிபர் இதுமாதிரி ஏராளமான கட்டடங்கள் கட்டி (30க்கும் மேல்) வாடகைக்கு விட்டிருப்பதாகவும், திருச்சூர் மாவட்டத்திலுள்ள பழஞ்சி, குன்னங்குளம் பகுதிகளில் இதே போல் பினாமி பெயர்களில் 'தொழில்' நடத்துவதாகவும் பரவலான பேச்சு. (இப்போது அவர் வெடி விபத்தில் கைதாகி ஜெயிலில் இருப்பதாய்த் தகவல்). இங்கிருந்து கோவை, தூத்துக்குடி, பெங்களூர், ராமேஸ்வரம் என்றெல்லாம் 'சரக்குகள்' சாதாரணமாக போய்க் கொண்டிருந்திருக்கின்றன.

கிடங்கின் வெடிச் சம்பவம் பற்றி விவரித்த கொக்கலா கிடங்குவாசியான ஒரு பெரியவர், "அன்னெய நைட்டு 2:30க்கு பாம் வெடிச்சதை நோக்கும்போ... ஒண்ணு கந்தகம்ன்னா எரிஞ்சிருக்கும். உப்புன்னா எரியவே செய்யாது. 20 கி.மீ. கேட்கிற அளவு வெடிக்கறதுக்கு என்ன காரணம்...? அதுவும் அர்த்த ராத்திரியில... எல்லோரும் பணி முடிஞ்சு போன பின்னாடி.... ஏதோ தப்பு நடந்ததாகத்தானே சந்தேகிக்கணும்...!" என்றார்.

இந்தக் கொக்கலா கிடங்கிலிருந்து வெடி குண்டுகள் பெரிய அளவில் சப்ளை ஆகியிருப்பதை உறுதியாக நம்புகின்றனர் பலரும். மேலும் கேரளாவில் மலப்புரம் பகுதி



• கோவையில் கண்டுபிடிக்கப்பட்ட வெடிகுண்டுகள்... (படம் நன்றி : ஹிந்து)

# குண்டுகள்..?

யில் வெடி மருந்துகளோடு, முஸ்லீம் தீவிரவாதிகள் மிகப் பாதுகாப்புடன் தங்கியிருக்கின்றனர் எனவும், அது முழுக்க முழுக்க முஸ்லீம் ஏரியா (கோவை – கோட்டைமேடு போல்) என்பதனால் அன்னியர் நுழைவது ஆபத்தில் முடியக்கூடும் என்றும் பரவலாகப் பேச்சு உள்ளது. இது இங்கு லோக்கல் போலீஸ் உள்பட மேலிடத்திற்கும் தெரியாதிருக்காது என்கின்றனர்.

இதில் சுவாரஸ்யமான விஷயம் என்னவென்றால், கொக்கலா குண்டு வெடிப்பில் நான்கு பேர் பலியாகி, அதன் நிமித்தம் ரிமாண்டில் இருந்த ஙிடங்கு அதிபருக்கு 'குட் கேரக்டர் சர்டிபிகேட்'டை மாவட்ட எஸ்.பியான சந்தியா கொடுத்திருக்கிறார் என பத்திரிகைகள் வட்டாரம் (உள்ளூரில்) சொல்லுகின்றன. இதுகுறித்து திருச்சூர் மாவட்ட எஸ்.பி. வட்டத்தில் கேட்டபோது பதில்கள் (பேட்டி) மறுக்கப்பட்டு சில தகவல்கள் மட்டுமே அளிக்கப்பட்டன.

● மிஸ்டர் ஜோனிக்கு எஸ்.பி. சந்தியா எந்தவித நன்னடத்தைச் சான்றிதழும் கொடுக்கவில்லை. மாறாக 'கொக்கலாவில் விபத்து நடந்தவுடனே அவரைக் கைது செய்து 'உள்ளே' வைத்து உடனடி ஆக்ஷன் எடுத்ததே இவர்தான். அப்புறம் எப்படி இவர் அவருக்கு அப்படி ஒரு நற்சான்று கொடுத்திருக்க முடியும்...?

● திருச்சூரிலிருந்து வெடி பொருள்கள் பெருமளவில் (குறிப்பாக கோவைக்கு) தமிழகத்திற்குச் செல்வதாகவும், அதுபற்றி முன்கூட்டியே கேரள போலீஸ் தகவல் கொடுத்து எச்சரிக்கையூட்டியும், அதைக் கண்டுகொள்ளாமல் விட்டது தமிழக காவல் துறை என்பதும் தவறான தகவல்கள்.

● திருச்சூரைப் பொறுத்தவரை கொக்கலா குடோன் போலவே பல்வேறு பட்டாசுத் தொழிற்சாலைகள் (நம்ம ஊர் சிவகாசி போலவே) உள்ளன. அதில் ஏற்படும் சராசரி விபத்துகளில் ஒன்றாக மட்டுமே இது இருக்கக்கூடும். இதைப் பத்திரிகைகள் மிகைப்படுத்திப் பார்க்க வேண்டிய அவசியம் இல்லை.

– இப்படி உயர் போலீஸ் அதிகாரிகள் வட்டம் சொன்னாலும் நாம் செய்தி சேகரித்த அதே நாளில், கோவை குண்டு வெடிப்புகள் சம்பந்தமாய் ஒன்பது பேரை (எட்டுப் பேர் கோவை, ஒருவர் திருச்சூர்) திருச்சூரில் 'காலத்தோடு' என்கிற இடத்தில் கைது செய்திருக்கின்றனர். பயங்கரவாதிகளுக்கு வெடிமருந்துகள் சப்ளை செய்யும் மையமாகவும் – அவர்கள் பதுங்குவதற்கு ஏற்ற இடமாகவும் திருச்சூர் இருந்து வந்திருக்கிறது என்கிற சந்தேகம் வலுப்பதற்கு இவர்களின் கைது ஒன்றே போதும் என்கின்றனர் நடுநிலையாளர்கள். அவர்களைக் கோவைக்குக் கொண்டு வந்து விசாரிக்கும் (தமிழக சி.பி.சி.ஐ.டி) பட்சத்தில் உண்மை வெளிச்சத்திற்கு வந்து விடும். ⊙

திருச்சூரிலிருந்து : **ரோகிணி**

"உங்களுக்குப் பிடித்த ஹீரோ யார்?" என்று இன்றைய டீன்-ஏஜ் பெண்களிடம் கேட்டால் பத்துக்கு ஏழு பேராவது "விஜய்!" என்றுதான் சொல்லுகிறார்கள். ரஜினி, கமலுக்கு அடுத்தபடியாக விநியோகஸ்தர்கள் கண்ணை மூடிக் கொண்டு வாங்குகிற படம் விஜய் நடித்ததுதான் என்றும் சொல்லப்படுகிறது. இப்படிப்பட்ட விஜய்யைப் பேட்டி காணலாம் என்று தொடர்பு கொண்டபோது, "அவன் ஷூட்டிங்குக்காக நாகர்கோயில் சென்றிருக்கிறான். அடுத்த வாரத்தில் ஒரு நாள் சென்னைக்கு வந்து போவான்! அப்போது பாருங்களேன்!" என்றார் அப்பாவும் டைரக்டருமான எஸ்.ஏ. சந்திரசேகர்.

ஒரு மாறுதலுக்காக நாகர்கோயிலில் உள்ள விஜய்யை டெலிபோனிலேயே (பில் பற்றி பப்ளிஷர் அல்லவா கவலைப்பட வேண்டும்; நமக்கென்ன!) பேட்டி காணலாமே என்று நினைத்தோம். அப்புறமென்ன, ஒரு முன்னிரவு நேரத்தில் டெலிபோனில் பேட்டி காண ஆரம்பித்தோம்...



"ஹலோ விஜய்! நாங்க கல்கியிலேர்ந்து பேசறோம்!"

"ஹலோ சார்! சொல்லுங்க. பேட்டியா... டெலிபோனிலேயா... வாவ்! கேளுங்க..."

"நாகர்கோயில்ல தேர்தல் பிரசாரமெல்லாம் எப்படி இருக்கு?"

"சூடுபறக்குது போங்க. இப்பத்தான் ஷூட்டிங் முடிஞ்சு ஹோட்டல் ரூமுக்கு வந்தேன். வழியெல்லாம் பிரசாரமயம்தான்!"

"இன்றைய முன்னணி ஹீரோக்கள் வரிசைல நீங்களும் வந்துட்டீங்க. எப்படி ஃபீல் பண்றீங்க?"

"இருபது பர்சண்ட் சந்தோஷமா இருக்கு. அதே நேரத்துல எண்பது பர்சண்ட் பயமாவும் இருக்கு?"

"எதுக்கு பயம்?"

"இன்றைய நிலையைத் தக்க வெச்சுக் கணுமேங்கிற பயம்தான்."

"தன்னம்பிக்கை இல்லையா என்ன?"

"ஷ்யூர். பயம் ஒருபக்கம் இருந்தாக்கூட இன்னொரு பக்கம் இந்த நிலையை நிச்சய

மாத் தக்கவெச்சுக்க முடியும்னு உள்ளு ணர்வு சொல்லிக்கிட்டே இருக்கு."

"ஞாபகம் இருக்கா விஜய்? ஆரம்பத்துல ஒரு முன்னணிப் பத்திரிகையில, 'இந்த மூஞ்சியையா காசு கொடுத்துப் பார்க்க ணும்?'னு விமர்சனம் செஞ்சிருந்தாங்களே... (பிறகு அந்தப் பத்திரிகை வருத்தமும் தெரி வித்திருந்தது) அதைப்பத்தி எப்பவாவது நினைச்சுப் பார்க்கிறதுண்டா?"

"ஓ யெஸ்! உண்மையிலேயே அந்தப் பத்திரிகைக்கு நான் நன்றிதான் சொல்லணும். அப்படி அவங்க கிண்டலடிச்சிருந்த என் மூஞ்சியைத்தானே இப்போ லட்சக்கணக்கான ரசிகர் கள் பார்த்துக் கிட்டிருக்



# இன்றைய ஹீரோ

# விஜய்!

காங்க... (சிரிப்பு) அந்தப் பத்திரிகைல நல்லால்லேன்னு விமர்சனம் எழுதினா நல்லா இருக்குன்னு அர்த்தம். நல்லா இருக் குன்னு எழுதினா நல்லா இல்லேன்னு அர்த் தம். இப்படி நான் எடுத்துக்கலை. ரசிகர்கள் எடுத்துக்கிறாங்கன்னு நினைக்கிறேன்..."

"உங்களுக்கு நண்பர்கள் இருக்காங்களா?"

"சினிமாவிலா?"

"பொதுவாத்தான்."

"எல்லாருமே எனக்கு பிரண்ட்ஸுங்க தான். ஆனாக்கூட எல்லாரோடும் டீப்பா பழகறதுக்கு நேரம் இருக்கறதில்லே. அதனால நல்ல நண்பர்கள்னு சொன்னா, நான் லயோ லாவுல விஷுவல் கம்யூனிகேஷன்ஸ் பண்ணினப்போ கூடப் படிச்ச நண்பர்கள் தான். நேரம் கிடைக்கறப்போ அவங்களோட சாப்பிடுவேன். அதுக்காக அம்மாகிட்ட அடம்பிடிச்சுப் பணம் வாங்குவேன்."

"உங்களுக்குப் பிடிவாத குணம் ஜாஸ் தின்னு உங்க அப்பா சொன்னார்!"

"அப்படியா சொன்னார்?"

"ஆமாம். செட்டுல நடிக்கறப்போ அவர்



## குமுறல்:

# காவல்துறைக்குப் பாராட்டு; மருத்துவத் துறைக்குக் குட்டு!

கடந்த ஜனவரி 20ம் தேதி நள்ளிரவில் கோவில்பட்டி–கயத்தாறு சாலையில் அய்யப்ப பக்தர்கள் சென்ற ஒரு பெரிய பஸ்ஸும், கன்னியாகுமரி செல்வதற்காக ஒரு குடும்பத்தினர் பயணம் செய்த ஓர் அம்பாசிடர் டாக்ஸியும் மோதிக் கொண்டன. டாக்ஸியில் சென்றவர்களில் சிலர் ஸ்தலத்திலேயே மரணமடைய, படுகாயமடைந்த மூன்று பெரியவர்களும் இரண்டு சிறு குழந்தைகளும் கயத்தாறு காவல் துறையினரால் உடனடியாகப் பாளையங்கோட்டை மருத்துவமனையில் சேர்க்கப்பட்டனர்!

சம்பவம் நடந்தது பற்றித் தகவல் கிடைத்ததும் உடனடியாக அங்கு வந்து சாலைப் போக்குவரத்தைச் சரி செய்தனர். அப்போது அங்கு வந்த விஜய் டி.வி.யினரின் வேனை பயன்படுத்தி காயமடைந்தவர்களை மருத்துவமனைக்கு எடுத்துச் சென்றனர். மனிதாபிமானமும் நேர்மையும் கொண்ட கயத்தாறு காவல்துறையினருக்கு மட்டுமல்ல, காயம் பட்டவர்களைப் பாளையங்கோட்டை வரை எடுத்துச் சென்று சிகிச்சைக்கு உதவியதுடன் மதுரை வந்து சம்பந்தப்பட்டவர்களின் உறவினர்கள் வீடுகளைத் தேடிப் பிடித்து, விவரங்களைத் தெரிவித்த விஜய் டி.வி.யினருக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆனால் மனிதாபிமானம் நிலவ வேண்டிய பாளையங்கோட்டை மருத்துவமனையில் மிகுந்த பற்றாக்குறை(எது?) நிலவுகிறது! அவசரப் பிரிவில் குடி தண்ணீர் வசதி இல்லை. நோயாளிகளின் உபயோகத்திற்கு வேண்டிய 'பெட்பேன்' ஒன்று மட்டுமே இருக்க, மக்கள் அவதிப்பட வேண்டிய கொடுமை. பாவம் பணியாளர்கள்! ரத்தத்தையும் உடைந்த எலும்புகளையும் பார்த்துப் பார்த்து மரத்துப் போய்விட்டது போலும். எந்த உதவி கேட்டாலும் அடுத்தவரைக் கைகாட்டும் நடைமுறை! விபத்துச் செய்தி அறிந்து நேரில் சென்று பார்த்ததில் காவல் துறையைப் பாராட்டவும், மருத்துவத் துறையைக் கண்டிக்கவும் நேர்ந்துள்ளது எனக்கு!

– தி. ரங்கசாமி

---

என்ன சொன்னாலும் மறு வார்த்தை பேசாமல் கேப்பீங்களாம். ஆனா வீட்டுக்கு வந்திட்டா கேட்க மாட்டீங்களாம்!"

"செட்டுல அவர் டைரக்டர். கேட்டுத்தானே ஆகணும். வீட்டுல அப்படியில்லையே... அவர் அப்பா. நான் மகன். செல்லமாகப் பிடிவாதம் பிடிச்சாத்தானே சுவாரஸ்யம் இருக்கும்!"

"அதுக்காகக் காஸ்ட்லியான செலவெல்லாம் வெக்கறீங்களாமே?"

"ஐயய்யோ! என்ன சொன்னார் உங்ககிட்ட?"

"எந்தவொரு புதுக்கார் வந்தாலும் உடனே வாங்கித் தரணும்னு ஒத்தைக்கால்ல நிக்கறீங்களாமே?"

"ஓ! இப்ப 'டாடா சபாரி' வாங்கித் தந்த விஷயமா?"

"அதேதான்!"

"எனக்குக் கார்னா அப்படியொரு பிரியம். அதனால கேட்டேன். பாவம், அப்பா! இந்த நியூமாடல் கார் விற்பனைக்குக் கூட வராத சமயம். ஷோரூம்லதான் இருந்தது. வேணும்னு கேட்டேன். எப்படியோ வாங்கியும் கொடுத்திட்டார்."

"இத்தனை சின்ன வயசுல, சிவாஜியோட நடிச்சது பத்தி என்ன நினைக்கறீங்க?"

"அந்த மூணு மாசமும் பிலிம் இன்ஸ்டிடியூட்ல படிச்ச உணர்வு எனக்கு. அவருக்குப் போட்ட லைட் என்மேலயும் விழுந்தது என்னோட பாக்கியம். அவரோட மூச்சு என் மேல பட்டது என்னோட குடுப்பினை... ஷுஉட்டிங்கின் முதல் நாளே, 'உங்க அப்பன் பேச்சையெல்லாம் கேட்காதே... நீ பாட்டுக்கு நடி'ன்னு என்னை அணைச்சுக்கிட்டு அவர் சொன்னது எனக்குக் கிடைச்ச பெரிய பாக்கியம்.. இதுக்குமேல எனக்குச் சொல்லத் தெரியலை..."

"மியூசிக்கெல்லாம் கேட்கறதுண்டா?"

"உண்டு."

"எதுமாதிரி?"

"எல்லா மியூசிக்குமே பிடிக்கும். அதைவிடத் தனிமை ரொம்ப ரொம்பப் பிடிக்கும்."

"உங்களுக்கு வர்ற பட வாய்ப்புகளை நீங்களே பார்த்து, கதை கேட்டு ஒத்துக்குவீங்

களா? இல்லே... அப்பா, அம்மாவோட அட்வைஸ்படிதான் ஒத்துக்குவீங்களா?"

"நிச்சயமா அவங்களோட கைடன்ஸ் எனக்குத் தேவை. அவங்ககிட்ட டிஸ்கஸ் பண்ணுவேன். ஆனாக்கூட ஃபைனலா டிசைட் பண்றது நான்தான்."

"அவங்க முடிவுக்கு எதிரா நீங்க முடிவெடுத்தா அவங்க வருத்தப்பட மாட்டாங்களா?"

"அவங்க அட்வைஸ் பண்ணுவாங்களே தவிர, ஆதிக்கம் செலுத்த மாட்டாங்க. அதனால பிராப்ளம் இல்லை. ஏன்னா... எனக்கு நூறு பர்சண்ட் நம்பிக்கை வந்த பிறகுதானே நான் என்னோட முடிவை எடுக்கறேன்..."

"உண்மையை மறைக்காம சொல்லுங்க விஜய்! உங்களுக்கு கேர்ள் ஃபிரண்ட்ஸ் இருக்காங்களா?"

"ஷ்யூர்."

"யாரு?"

"என்னோட கிராண்ட்மா. தொண்ணூறு வயசாகுது. என்னோட பேரண்ட்ஸை விட அந்த ஓல்ட் லேடியைத்தான் எனக்கு ரொம்பவும் பிடிக்கும். வீட்டிலே இருக்கறப்ப எல்லாம் அவங்களோடதான் நிறைய நேரத்தைச் செலவழிப்பேன்!"

"நல்ல விஷயம்தான்!"

"என்ன சுரத்தில்லாம பேசறமாதிரி இருக்கு.. நீங்க எதிர்பார்த்த பதில் கிடைக்கலையேன்னு அப்செட் ஆயிட்டீங்களா?" (சிரிப்பு).

"கேர்ள் ஃபிரண்ட் அப்படீன்னாலே தப்பாத்தான் எடுத்துக்கணுமா என்ன?"

"பெரும்பாலும் பத்திரிகைக்காரங்க அப்படியொரு முடிச்சுப் போடணும்னு தானே இப்படியெல்லாம் கொக்கி போடுவாங்க?"

"சேச்சே! நாங்க அப்படிப்பட்ட எண்ணத்தில கேக்கலை. நீங்க ரொம்பவும் ரிசர்வ்ட் டைப்புன்னு உங்க அப்பா சொன்னார். ஆனாலும் இப்படி நீங்க ஜோவியலாப் பேச நீங்களேன்னு ஆச்சரியப்பட்டோம்... அதுதான்..."

"கல்கில எதையும் திரிச்சுப் போடமாட்டீங்கன்ற தைரியத்திலதான் இப்படி நானும் பேசினேன். இல்லேன்னா பேசியிருக்க மாட்டேன்."

"ஓகே. தாங்க்யூ. குட்நைட்."

"வெல்கம்! குட் நைட்!"

டெலிபோன் பேட்டி : **பிரின்ஸ்**

அட்டை வண்ணப்படம் : **பிரவீண் குமார்**

# "தேனிலவுக்கு ஹோட்டல் தமிழ்நாடு..."



**தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகத்தின் ஹோட்டல் தமிழ்நாடு சகல வசதிகளுடன் உங்கள் தேனிலவை மேலும் மகிழ்ச்சி சேர்க்கக் காத்திருக்கிறது.**

## தேனிலவுக்கான சிறப்புக் கட்டணங்கள்

| இடம் | தங்கும் வசதி (இருவர் தங்கும் அறை) | சீசன் நேரத்தில் | சீசன் இல்லாத சமயத்தில் |
|---|---|---|---|
| உதகமண்டலம் | டீலக்ஸ் (Suite) | ரூ. 1795 | ரூ. 1230 |
| கொடைக்கானல் | டீலக்ஸ் | ரூ. 1480 | ரூ. 1130 |
| ஏற்காடு | டீலக்ஸ் | ரூ. 1270 | ரூ. 1030 |
| மாமல்லபுரம் | A/c | ரூ. 1930 | ரூ. 1930 |

விரைவில் ஹோட்டல் தமிழ்நாட்டின் மற்ற கிளைகளிலும்.

மேலும் விவரங்களுக்கு:

**தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக்கழகம்**

பதிவு அலுவலகம்: 25, இராதாகிருஷ்ணன் சாலை, சென்னை -4.

போன்:8547335, 8547344,8547346, 8546843.

4, ஈ.வெ.ரா. சாலை, பார்க் டவுன், சென்னை - 3.

போன்: 561385, 582916, 560294

DIPR/173/DIS/98






1998 மார்ச் 1
ஈசுவர மாசி 17
மலர் : 56
இதழ் : 31

**கல்கி**

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



# கருணாநிதி ஆட்சிக்கு வைக்கப்படும் குண்டு!

கோவையில் வெடித்த குண்டுகள் அப்பாவி உயிர்களைப் பலிகொண்டதுடன் தமிழக வரலாற்றில் அழிக்க முடியாத கரும்புள்ளிகளைப் பதித்திருக்கின்றன. நாகூர் தர்காவில் ஹிந்துக்களுக்கு உள்ள ஈடுபாடும் பல ஹிந்து ஆலயங்களிடத்தில் முஸ்லிம்களுக்கு இருக்கிற மரியாதையும் தமிழ்ப் பண்பாட்டின் ஊடு பாவுகள். வெடிகுண்டுப் புகையால் அந்த உயர்ந்த உறவுகள் நலிந்து போயிருக்கின்றன. காரணம்...? தலைவர்களின் குறுகிய அரசியல் பார்வை; அரசாங்கத்தின் அலட்சியம்!

தேர்தல்கள் ஒழுங்காக நடந்துவிடக்கூடாது என்பதற்காக அண்டை நாடுகள் (பாகிஸ்தான்) திட்டமிட்டு இந்தியாவில் அமைதியைக் குலைத்து வருவதாக உளவுத் துறை அறிக்கைகள் கூறுகின்றன. இந்த ஐ.எஸ்.ஐ. ஊடுருவல் தமிழகம்வரை நிகழ்ந்திருப்பதாக மத்திய உளவுத் துறை தமிழக அரசுக்கு முன்கூட்டியே தெரிவித்தும் இருக்கிறது.

அண்டை மாநிலமான கேரளாவில், திருசூர் பகுதியில், உரிமம் பெற்ற தனியார் வெடிகுண்டுக் கிடங்கிலிருந்து தமிழகத்துத் (குறிப்பாகக் கோவை) தீவிரவாத இயக்கங்களுக்கு வெடிகுண்டுகள் அனுப்பப்பட்டதாகச் சந்தேகிக்கப்பட்டது. அச் சந்தேகம் தமிழக காவல் துறைக்குத் தெரிவிக்கப்பட்டும் இருக்கிறது. இது தவிர, கோவையில் அடிப்படைவாத அமைப்புகள் வெறியுடன் செயல்பட்ட சமீபத்திய சம்பவங்களும் தமிழக அரசுக்கு எச்சரிக்கைதான். போதாக் குறைக்கு, பொறுப்புள்ள பத்திரிகைகள் பலவும்




அவ்வப்போது தமிழக அரசையும் முதல்வரையும் உளவுத் துறையையும் எச்சரித்து வந்துள்ளன.

இவ்வளவையும் மீறி தமிழக உளவுத் துறையும் காவல் துறையும் இவ்வாறு பகிரங்கமாகக் கோவையில் தோல்வியுற்றது ஏன்...? கோவையில் அமைதிக்கு பங்கம் விளைவித்த தீவிரவாத அமைப்புகளை முன்னெச்சரிக்கையாகத் தடை செய்யாதது ஏன்...? அவற்றின் திரைமறைவு நடவடிக்கைகளை முன் கூட்டியே ஒடுக்கத் தவறியது ஏன்...?

முதல்வர் கருணாநிதி இதற்கு முறையாக பதில் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறார். அவரது பதில் வராத வரையில், தேர்தல் நோக்கில் சிறுபான்மையினரின் வாக்குகளை இழந்துவிடுவோமோ என்கிற அச்சத்தில் அவர் வேண்டுமென்றே மெத்தனமாக இருந்துவிட்டதாகவே நாம் முடிவுக்கு வர வேண்டி யிருக்கிறது. அந்த மெத்தனம் ஒரு விபரீதத்துக்கு மட்டுமின்றி, அதன் விளைவாக தி.மு.க.வுக்கு வாக்குகள் குறையவும் வழிவகுத்து விட்டது.

இவ்வளவு துயரமான சம்பவங்கள் நடந்த பிறகும் முதல்வர் மனம்வருந்தி தார்மிகப் பொறுப்பேற்க வில்லை. மாறாக, 'அத்வானி தாம் தப்பியதற்கு நன்றி கூறாமல் தி.மு.க. ஆட்சியைக் குறை கூறுவது அநியாயம்' என்கிறார் கருணாநிதி.

அத்வானி உயிர்தப்பியதற்கு நிச்சயமாகத் தமிழக அரசு காரணமில்லை; நிகழ்ச்சிக்கு அவர் நேரம் தவறி வந்ததே காரணம் என்பது வெளிப்படையாகத் தெரிகிறது.

பி.ஜே.பி. தலைவரின் நிகழ்ச்சி நிரலை உன்னிப்பாகக் கவனித்துத் தீட்டப்பட்ட சதித்திட்டம்தான் கோவை தொடர் வெடிகுண்டு விபத்து. ராஜீவ் காந்தி கொலை போலவே மீண்டும் ஒன்றை நிகழ்த்தத் தீவிரவாதிகள் துணிந்தனர். அவர்கள் எண்ணம் மட்டும் நிறைவேறியிருந்தால், கருணாநிதியின் அரசியல் எதிர்காலமே இருண்டு போயிருக்கும்.

தமிழக உளவுத் துறையின் படுமோசமான செயல்பாடு, அதன் பின்விளைவான நிகழ்வுகள் ஆகிய வற்றுக்குக் கருணாநிதி பொறுப்பேற்க வேண்டுமெனில், தீவிரவாத சிந்தனைகளின் பயங்கரமான




வளர்ச்சிக்கு பி.ஜே.பி.யும் பொறுப்பேற்க வேண்டும்.

சிறுபான்மையினரின் பாதுகாப்புணர்வைச் சீண்டி சோதிக்கும் ஹிந்துத்வ கொள்கைகளினால் ராம ராஜ்யம் விளையாது; ரணகள ராஜ்யம்தான் விளையும்! 'பப்ரி மஸ்ஜித் தகர்க்கப்பட்ட இடத்தில் ராமர் கோயில் அமைப்போம்' போன்ற சூளுரைகளும் கோவை சம்பவங்களைத் தூண்டியிருக்கும் என்பதை மறுப்பதற்கில்லை. ஹிந்து அடிப்படைவாதக் கட்சியான பி.ஜே.பி., அ.இ.அ.தி.மு.க.வுடன் இணைந்து தமிழகத்தில் வேரூன்றிவிடக் கூடாது என்கிற நோக்கத்துடன் முஸ்லிம் அடிப்படைவாதிகள் செயல்பட்டிருக்கலாம். இந்தச் சூழலில் இவர்களை வளைத்துப் போடுவதும் விலைக்கு வாங்குவதும் பாகிஸ்தானின் ஐ.எஸ்.ஐ.க்கும் சுலபமாகிப் போகும்.

ஆக, தேர்தலை முன்னிட்டு கருணாநிதி எடுத்திருக்கக் கூடிய முடிவும் சரி, அத்வானி வகுத்த வியூகமும் சரி, பயன்தராதவை என்பது நிரூபணமாகிவிட்டது.

இவ்வளவு துயரமான நிகழ்வுகளும், மீண்டும் அரசியல் ஆதாயத்துக்காகவே அனைத்துக் கட்சியினராலும் பயன்படுத்தப்படுகின்றன என்பது மேலும் வேதனைக்குரிய விஷயம்.

தி.மு.க. பி.ஜே.பியையும் பி.ஜே.பி., தி.மு.கவையும் குறை கூற; காங்கிரஸ், கோவை சம்பவங்களில் பி.ஜே.பி. குளிர்காய்வதாகக் குற்றம்சாட்ட, 'கருணாநிதி ராஜினாமா' குரல் அனேகமாக எல்லா எதிர்க்கட்சிகளிலிருந்தும் எழ... ஹிந்து-முஸ்லிம் வேறுபாடு, கலவரம் என்கிற மையப்பிரச்னையைக் கவனிப்பார் இல்லை.

அடிப்படைவாதமும் வன்முறையும் எந்தப் பிரச்னையையும் தீர்க்காது; வளர்க்கவே செய்யும் மனித நேயமும் கல்வியும் உழைப்பும்தான் எந்தப் பிரிவினரையும் உயர்த்த முடியும்.

- இதை எடுத்துச் சொல்லி மக்களை வழி நடத்தும் பொறுப்பு எல்லா அரசியல் தலைவர்களுக்கும் இருக்கிறது. நல்ல வார்த்தைகளுக்குச் செவிசாய்க்காமல் வன்முறையில் ஈடுபடும் தீவிரவாதிகளைக் கடுமையாக ஒடுக்கும் பொறுப்பு அரசாங்கத்துக்கு இருக்கிறது. இனியேனும் கருணாநிதி விழித்துக் கொள்ளாவிட்டால் கோவையில் வைத்த குண்டு, அவர் ஆட்சிக்கு வைக்கப்படும் குண்டாக மாறிவிடும்.



# ஆலோசனை மேஜையில்...

**ஓடி ஓடிப் பிரசாரம் செய்து, வோட்டுக் கேட்டு ஓய்ந்து கிடக்கும் தலைவர்கள், தேர்தல் முடிவு தெரியும் வரை என்ன பேசிக் கொள்ளுவார்கள்? கொஞ்சம் 'ஒட்டு'க் கேட்டோம் :**

**பா.ஜ.க. அலுவலகம் :**

**சுஷ்மா சுவராஜ் :** அத்வானிஜீ, நீங்க கவலையேபட வேண்டாம். உங்களை எதிர்த்து நிக்கற சைதன்ய மகராஜுக்கு ஆயிரம் வோட்டுக் கிடைச்சா அதுவே அதிகம். வகேலாவுக்கு மூக்கு உடையத்தான் போகுது.

**அத்வானி :** அவங்க எல்லாம் கிடக்கட்டும். நான் ரெண்டு லட்சம் வாக்குகள் வித்தியாசத்துல ஜெயிக்கணும். அப்பத்தான் வாஜ்பாயியை விடக் கூடுதல் வோட்டு வித்தியாசத்துல ஜெயிச்ச பெருமை கிடைக்கும்.

**சுஷ்மா :** நல்ல ஆளு நீங்க! முதல்ல தேர்தல்லயே நிக்கலேன்னீங்க. அப்புறம் சபலம் வந்ததும், வாஜ்பாய் பிரதமர் ஆனா, அவர் கீழே துணைப் பிரதமரா வேலை செய்யத் தயார்னுட்டீங்க. இப்போ, ரெண்டு - ரெண்டரை லட்சம் வோட்டு வித்தியாசத்துல ஜெயிச்சுட்டா, 'வாஜ்பாயியை விட பிரதமர் பதவிக்கு நான்தான் லாயக்கு'ன்னு சொல்ல நினைக்கிறீங்க போல! உங்க சாமர்த்தியம் யாருக்கு வரும்? வாஜ்பாயிக்கு சான்ஸ் இல்லேன்னா கோவிந்தாசார்யா கும்மாளம் போடுவார்!

**அத்வானி :** வாஜ்பாய் பதிமூணு நாள் பிரதமரா இருந்துட்டாரே, போதாதா? எப்படியும் தொங்கு பார்லிமெண்ட்தான். ஜனாதிபதி பா.ஜ.க.வைப் பதவி ஏத்துக்கக் கூப்பிட்டா நான் ஓடிப் போய்ப் பிரதமராகி, 26 நாளாவது இருந்துட்டு, அப்புறம் நம்பிக்கை வாக்கெடுப்பு எடுக்கறேனே! முரளி மனோகர் ஜோஷியிடம் சொல்லிக் கொஞ்சம் ஏற்பாடு பண்ணு.

**சுஷ்மா :** கல்யாண் சிங்கைக் கேக்கறேனே? அவர்தான் கெட்டிக்காரர். நாம 200 சீட்டைப் பிடிச்சிட்டா, பாக்கிய அவர் பார்த்துப்பார். என்ன, ஒரு 180 அமைச்சர்களை மந்திரியில நியமிக்க வேண்டியிருக்கும், அவ்வளவுதான்!

**அத்வானி :** எப்படியோ! வாஜ்பாயியைவிட இரண்டு நாள் கூடுதலா நான் பிரதமர் பதவி வகிச்சுட்டாப் போதும்.

**சுஷ்மா :** வெறுமனே கியூவுல நின்னு வோட்டுப் போட்டதுக்கே ஜனாதிபதிக்குப் பாராட்டுக் கடிதம் எழுதி அனுப்பிச்சிட்டார் வாஜ்பாய். இப்போ ஜனாதிபதிக்கு யார் பேரு ஞாபகம் இருக்கும்? நீங்க சான்ஸை மிஸ் பண்ணிட்டீங்க.

**அத்வானி :** சோனியா வாஜ்பாயியைப் பொய்யர்னு

சொல்விட்டதாலே, ஜனாதிபதி என்னைத்தான் பிரதமர் பதவி ஏத்துக்க ஒப்புக்குவார், பார்த்துக்க!

**தி.மு.க. அலுவலகம் :**

**அன்பழகன்** : நீங்க இப்படி ஓய்ஞ்சு உக்காந்திடக் கூடாது. கர்ச்சீப்பைக் கையில வச்சுக்கிட்டு, கண்கலங்கின



மாதிரி இருந்தீங்கன்னா தேர்தல் தோல்வி பயத்துல கருணாநிதி அழுது கொண்டிருக்கார்னு அம்மையார் அறிக்கை உட்டுடுவார். மஞ்சள் துண்டால மூஞ்சியத் தொடச்சிக்குங்க. அப்பத்தான் களையா இருக்கும்.

**கருணாநிதி** : அம்மையாராவது, பொம்மையாராவது! நான்தான் அப்படிச் சொல்லித் தொலைக்க வேண்டியிருந்துது. நீங்களாவது அவங்க பேரை, நறநறன்னு பல்லைக் கடிச்சுக்கிட்டாவது, சொல்லக் கூடாது?

**அன்பழகன்** : பிரசாரம் முழுக்க அந்த அம்மா உங்க பெயரைச் சொல்லி கடுப்பேத்திட்டாங்க. ரொம்ப அதிர்ந்து போய்ட்டீங்க...

**கருணாநிதி** : அது கிடக்கட்டும். அடுத்த குண்டு வெடிச்சா கருணாநிதியே பதவியை விட்டு விலகிடுவார்னு, ரஜினி பேட்டில ஒரு குண்டைத் தூக்கிப் போட்டுட்டாரே? அடுத்த குண்டு எப்ப வெடிக்குமோன்னு, வயத்துல வெடிகுண்டைக் கட்டிட்டிருந்த மாதிரி இருந்தேன்!

**அன்பழகன்** : நீங்க பயப்படவே வேணாம். அல் உம்மா இல்லே, அந்தம்மாவே கூட வச்சிருக்கலாம்னு அடுத்த டீவி பேட்டில ரஜினி சொல்லிடுவார்.

**கருணாநிதி** : நல்லவேளை, நம்மை விட்டுக் கொடுக்காம, புத்திசாலித்தனமா ஆர்.எஸ்.எஸ்.தான் கோவைலே வெடிகுண்டு வச்சிருக்குன்னு கேசரி சொல்லிட்டார். அவரை இன்னும் கொஞ்சம் கூடப் பேச விட்டிருந்தா, அத்வானியேதான் அவரோட பாக்கெட்டுலயே வெடிகுண்டைப் போட்டு எடுத்துட்டு வந்தார்னு சொல்லியிருப்பார்.

**அன்பழகன்** : யாரோ ஆர்.எஸ்.புரம்னு சொன்னதை அவர் அரைகுறையாக் கேட்டுட்டு, ஆர்.எஸ்.எஸ். மேல பழியப் போட்டுட்டார். அதான் கொஞ்சம் கூடத் தயங்காம அப்படிச் சொல்லிட்டார்.

**கருணாநிதி** : எப்படியோ, அடுத்த தடவை காங்கிரஸ் சப்போர்ட்டுல ஆட்சி அமைச்சா, நம்மை விட்டுக் கொடுக்காம இருந்ததுக்கு அவரைப் பாராட்டி நன்றி சொல்ல, அவரே ஒரு நல்ல சான்ஸ் கொடுத்திட்டார். தப்பிச்சோம்! ஏன்.





மாறனுக்கு அமைச்சர் சான்ஸ் கூட இருக்கு!

**10, ஜன்பத் சாலை :**

**ப்ரியங்கா :** ஒரு வாரமா கையெல்லாம் ஒரே வலிம்மா....

**சோனியா :** நான் முதல்லயே சொன்னேனே, மேடைல ஏறின உடனே கையை அப்படி வேக வேகமா வீசி வீசி ஆட்டாதேன்னு, கேட்டியா? கொஞ்சமா டோலோனக்ஸ் ஜெல் போட்டுத் தேய். வலி போயிடும். அடுத்த தேர்தல் கூட்டம் இத விட சீக்கிரமா வந்துடும் போல இருக்கு. அப்ப வேற நீ கையை வேக வேகமா ஆட்டணும்.

**ராகுல் :** அம்மா, நீ கூடத்தான். அப்படி ஒரே வேகமா மேடைலே ஏறாதேன்னு சொன்னா கேக்க மாட்டேங்கறே. தடுக்கி விழுந்தா வீட்டுக்குப் போன உடனே கேசரி ரகசியமா சிரிப்பார். ஆமா!

**சோனியா :** அவரைப் பார்த்துத்தான் இப்ப ஊரே சிரிக்குதே! இனிமே ஆயுசுக்கும் காங்கிரஸ் தலைவர் பதவி வேண்டாம்னு உட்டுட்டுப் போயிடுவார் பாரு!

**ப்ரியங்கா :** ஆனாலும் நீ வாஜ்பாயைப் பொய்யர்னு சொல்லியிருக்கக் கூடாது. சாதாரணமா ஒரு நிமிஷத்துக்குப் பத்துத் தடவை கண்ணை மூடி மூடித் திறக்கறவர், அன்னிக்குக் கோபத்துல நூறு தடவை கண்ணை மூடி மூடித் திறந்துட்டார். பேச்சு வரவே ரொம்ப நேரமாச்சு!

**சோனியா :** ஒரு வருஷத்துக்காவது எலெக்ஷன் வராம இருந்தா நல்லது. பிரணாப் முகர்ஜி கிட்டவும், அர்ஜுன் சிங் கிட்டவும் சொல்லிடணும். ஐக்கிய முன்னணிக்கு ஆதரவு கொடுத்தாலும், ஆறு மாசத்துக்கு ஒரு தடவை 'ஆதரவு வாபஸ்'னு பயமுறுத்தினாப் போதும். ரொம்ப அதிகமா மெரட்டிடாம இருக்கச் சொல்லணும்.

**ராகுல் :** ப்ரியங்காவோட கை வலி சரியான உடனே வேணா ஆதரவை வாபஸ் வாங்கச் சொல்லிடலாம்!

**அ.இ.அ.தி.மு.க. அலுவலகம் :**

**ஜெ :** கருணாநிதி அப்படியே அரண்டு போய்க் கிடக்கறார். என்னோட 5 வருட ஆட்சியிலே 334 தடவை குண்டு வெடிச்சிருக்குன்னு போற இடத்துல எல்லாம் புள்ளி விவரம் சொல்லிட்டிருந்தார். இப்ப என்னடான்னா, கோயமுத்தூர்ல மட்டுமே, மூணே நாள்ல 300 வெடி குண்டு வெடிச்சிருச்சு!

**நெடுஞ்செழியன் :** எதெதுக்கு எல்லாம் கணக்கு வச்சுக்கறதுன்னு ஒரு வெவஸ்தையே இல்லே அவருக்கு! நானும் சொல்றேன் புள்ளி விவரம் : வருஷத்துக்கு 365 நாள். 5 வருஷத்துக்கு 1825 நாள். 1825 நாள்ள 334 நாள்தான் வெடிகுண்டு வெடிச்சிருக்கு. பாக்கி 1491 நாள் குண்டே வெடிக்காம, தமிழ்நாடே அமைதிப் பூங்காவா இருந்திருக்கு! ஹையா!

**சு. சுவாமி :** அத்வானி வர வழியிலே

குண்டு வைக்கணும்னு கருணாநிதியேதான் சொல்லிட்டிருந்தார். என் காதாலேயே கேட்டேன்.

**ராமதாஸ்** : எல்லாரும் அவங்க அவங்க காதாலதான் கேப்பாங்க. இன்னொருத்தர் காதாலயா கேப்பாங்க? சரியான கோமாளிய்யா!

**வை.கோ** : அத்வானியத் தீர்த்துக் கட்டிட்டு, மாறனைப் பிரதமராக்க சதித் திட்டம் தீட்டியிருக்கார் கருணாநிதி. அது இப்ப அவர் பதவிக்கே ஆபத்தாயிடிச்சு.

**வாழப்பாடி** : நாம ஆட்சி அமைச்சிட்டா, முதல் வேலையா அத்வானிகிட்டே சொல்லி கலைஞர் ஆட்சியைக் கலைச்சிடணும். மத்ததெல்லாம் அப்புறம்தான்.

**காளிமுத்து** : எழுதின இங்க் பேனாவுக்குள் புகாது. வெடித்த குண்டு மறுபடி வெடிக்காது. அதனால் கருணாநிதி இனிமேலும் புளுகாமல், பொய்யுரைக்காமல், தன் பதவியைத் தானாகவே முன்வந்து ராஜினாமா செய்து, மாநிலத்தில் தேர்தல் நடத்தக் கேட்டுக் கொள்ள வேண்டும்.

**ஜெ** : தேர்தல்ல நாம் ஜெயிச்சு, நானே முதல்வராகி, அவரை ஜெயிலில் அடைப்பேன். எத்தனை நாள் ஜெயிலில் இருந்தால் அவர் திருந்துவார் என்பதை, சோவிடம் கேட்டு, அதுவரை அடச்சு வெச்சுருவேன். அப்புறமா விட்டுடலாம்.

**சு. சுவாமி** : தேர்தலே வேணாம். நாப்பது சீட்டும் நாம்தான். எங்க பார்த்தாலும் ஒரே வாஜ்பாய் அலைதான், ஜெயலலிதா அலைதான் அடிச்சுது. எல்லா அலையையும் எண்ணி எண்ணிப் பார்த்தேன். இனிமே நம்மை யாரும் அசைச்சுக்க முடியாது. நானே ஹோம் மினிஸ்டராகி, கருணாநிதி ஆட்சியக் கலைச்சிடுவேன்!

**வாழப்பாடி** : உளறாதீங்க. சோனியா பிரதமர் ஆயிடுவாங்கன்னு ஒரு பேச்சு அடிபடுது. அப்ப நான் மறுபடி காங்கிரசுக்குப் போயிடுவேன். போயிட்டா ஹோம் மினிஸ்டர் யாரு? நான்தான்!

கற்பனை : **சாருகேசி**

## இன்றைய ஸ்பெஷல்

சிலருக்கு இனித்து,
சிலருக்குக் கசக்கும்
கருத்துக் கணிப்பு
ஸ்வீட்டிலே சேர்த்தியா,
காரத்திலே சேர்த்தியா?

## ஏனெனில்—



வேட்பு மனுவை
ராகு காலத்தில்
தேவே கவுடா
தாக்கல் செய்ததேன்?
அப்போது மட்டுமே
அவர் தூங்காமல் இருந்ததால்.

## மம்மு மனம் கல்லு



மம்மு தா என்று
குழந்தைகள் கைநீட்ட,
மம்மு மொத்தமும்
தானே முழுங்கி,
படுக்கைகள் மட்டும்
பிள்ளைகளுக்குப் போட்ட
மம்தா பானர்ஜியின்
மனமென்ன கல்லா?

## ஒன்று பாக்கி

தி.மு.க., த.மா.கா.,
அ.தி.மு.க., ம.தி.மு.க,
பா.ம.க., பா.ஜ.க.,
ஜ.த.க., பு.த.க.,
இ.கா., ரா.கா.,
இத்தனை வந்தபின்
மக்களுக்குப் பாக்கி
த.பி.க. ஒன்றுதான்.
(தலையைப் பிய்த்துக் கொள்ளும் கட்சி.)

## எங்கே அவர்?

சந்தன வீரப்பன்தான்
சந்தடியே இல்லை.
நம்ப
ஆறிரம் வீரப்பனை
ஆராச்சும் பார்த்தீங்களா?

— முன்றி

"முடியாது. நான் இந்த வீட்டை விட்டு நகர மாட்டேன்"னு ஸ்வெட்லானா கதற, அதெல்லாம் முடியாதுன்னு அவ ஹஸ்பெண்ட் அவளை தரதரன்னு இழுத்துக்கிட்டு வெளியேறினதை டீ.வி.யிலே பார்த்தப்போ ஐயோ பாவம்னு இருந்தது.

இருங்க. உடனே அந்தக் கணவனை கொடூரமானவனா நினைச்சு சாபம்

# செசன்யா!

கொடுக்க வேணாம். இது ஆண் கொடுமையில்லே. போர்க் கொடுமை.

செசன்யா தெரியுமில்லையா? அதுதாங்க சோவியத் யூனியனின் ஒரு பார்ட்டாக இருந்த குடியரசு. அப்புறம் சோவியத் உடைஞ்சப்போ கூட ரஷ்யாவோட ஒரு பகுதியாத்தான் இருந்தது. ஆனால், பின்னால ரஷ்யாவோடு டூ விட்டுக்கிட்டு தனியா ஒரு பாராளுமன்றமே அமைச்சுக்கிட்டது. "விட்டேனா பார். நீ எனக்குள் அடக்கம்" அப்படின்னு திருவிளையாடல் சிவன் பார்வதிகிட்டே கர்ஜனை செய்த மாதிரி ரஷ்யா தாக்கத் தொடங்கிடுச்சு.... இப்போ செசன்யா ரணகளம்.

சண்டைன்னா எல்லாருக்குமே பாதிப்புத்தான்னாலும் செசன்யாவில் பெண்களை இது கொஞ்சம் அதிகமாகவே பாதிச்சிருக்கு. பல வீடுகள் தரைமட்டம்! "என்னுடைய இந்த வீடு உருவாக எவ்வளவு ப்ளான் போட்டேன் தெரியுமா? எனக்கு பரம்பரைச் சொத்தாக வந்த அத்தனை நகைகளையும் வித்தேன் தெரியுமா? ஏதோ சண்டையில் வீட்டின் ஒரு பகுதி குண்டு வீச்சிலே இடிஞ்சு போனதுக்காக இதைக் காலி செய்யணும்னா எப்படி?" என்பது 25 வயது ஸ்வெட்லானாவின் வாதம்.

அவர் கையில் மூன்று மாதக் குழந்தை. "இவள் பெரியவளானால் படிக்கத் தேவைப்படுமேன்னு இந்த வீட்டில் ஒரு தனி ரூம் கட்டியிருக்கிறோம் தெரியுமா?"ன்னு அவ கதறினதைக் கேட்டப்போ... கைக் குட்டையெல்லாம் வேண்டாங்க.... நானே கண்ணைத் துடைச்சிக்கறேன்.

வீட்டிலே கணவர் எந்நேரமும் கைவசம் வெடிகுண்டை வைச்சிருக்க... திடீர்னு ரஷ்யப்படை வந்தால் போடணுமே! - கடனே என்று சுக்கா ரொட்டியையும் அவ்வப்போது கிடைக்கும் வறுத்த மீனையும் சாப்பிட்டு "அல்லா"வேன்னு அழுதுக்கிட்டு அவங்க நாட்களைக் கடத்தறது ரொம்பப் பரிதாபம்.

செசன்யாவின் முக்கிய நகரம் க்ராஸ்னி. அதிலே ஒரு பகுதியிலே ஜனங்க ரொம்ப நொந்து போயிட்டாங்க. மழை விட்டும் தூவானம் விடலைங்கிற கதையா, அப்பப்போ போர் ஓய்ந்தாலும் மார்க்கெட்டிலே உணவுத் தட்டுப்பாடு வந்துடுது. வீட்டுக்கெல்லாம் கியாஸ் கனெக்ஷன் ட்யூபிலேயே வரும் வசதி உண்டு. அதாவது நம்ம வீட்டிலே தண்ணீர்க் குழாய் மாதிரி அங்கேயெல்லாம் கியாஸ் குழாய்.

ஆனா போதாதகாலம் இந்த யுத்தத்திலே கியாஸ் வருகிற இணைப்புக் குழாயெல்லாம் உடைஞ்சு போயிடுச்சு. சிலிண்டர் சிஸ்டமும் கிடையாதா, பசியாலே குழந்தைகளும், அதைப் பார்த்து அம்மாக்களும் அழுது தள்ளிக்கிட்டிருக்காங்க.

ஐம்பது வயசான வேரா என்கிற பெண்மணி "ரஷ்ய அதிபர்



• செசன்யாவின் அலங்கோலம்

யல்சினை தூக்கிலே தொங்கவிட்டாத்தான் என் மனசு ஆறும்"னு வயித்தெரிச்சல் தீர சாபமிட்டிருக்கா!

இதிலே இன்னொரு அவஸ்தையும் இருக்கு. சோவியத் யூனியன் ஒண்ணா இருந்தப்போ ரஷ்யாவோட ஒரு பகுதியா செசன்யா இருந்தது இல்லியா? அப்போ பல ரஷ்யர்கள் செசன்யாவிலே நிலம், வீடுன்னு வாங்கிப் போட்டிருக்காங்க. செசன்யா பகுதியிலே மெஜாரிடியாக வாழ்ந்துக் கிட்டிருக்கும் முஸ்லிம் களும், அதே பகுதியில் அப்போ வசிச்சுக்கிட்டிருந்த ரஷ்யர்களும் ஒரு குடும்பமா பழகிக்கிட் டிருந்தாங்க. இப்போதைய நிலவரம் மாறிப் போனதிலே, பாரதி பாடலை உல்ட்டா செய்த மாதிரி நடந்துக்கிறாங்க... ஒரு தாயின் வயிற்றில பிறந்தோர், சகோதரர்களானாலும், சண்டை போட்டுக்கறாங்க. தங்கள் பகுதியை விட்டு ரஷ்யக் குடும்பங்கள் மொத்த மொத்தமாக வெளியேறுவதைப் பார்த்து, "எதுக்கு இந்தச் சண்டை?"ன்னு வெடிச்சுப் போய் அழுதுக்கிட் டிருக்காங்க, செசன்யப் பெண்கள்.



• கதறும் பெண்கள்....

— சுமி

# குண்டு வெடிப்பின் பின்னணியும் பொறுப்பற்ற பதில்களும்!

ஹைதராபாத்தில் 1981-ல் நடைபெற்ற இரண்டாவது முஸ்லீம் மாநாடு, இந்தியாவில் வாழும் பன்னிரெண்டு கோடி தாழ்த்தப்பட்ட சமுதாய மக்களை முஸ்லீம்களாக மதம் மாற்ற வேண்டும் என்று தீர்மானம் நிறைவேற்றியது. இவர்களுடன் இந்திய முஸ்லீம்கள் எட்டுக் கோடி பேரையும் சேர்த்து, இருபது கோடியாக பலம்கூட்ட வேண்டும் என்று அந்த மாநாடு முடிவு செய்தது. அதைத் தொடர்ந்து மீனாட்சிபுரத்தில் ஒட்டுமொத்தமாக மதமாற்றம் நடைபெற்றது. இப்படிப்பட்ட மதமாற்ற அலையைத் தடுத்து நிறுத்துவதற்காக ஆர்.எஸ்.எஸ்., விஸ்வ ஹிந்து பரிஷத், இந்து முன்னணி இயக்கங்கள் மாவட்டம்தோறும் இந்து எழுச்சி மாநாடுகளை நடத்தின. மதமாற்றத்தை பா.ஜ.க.வும் கண்டித்தது.

1982-ல் முதல் மாநாடு மிகப் பெரிய அளவில் கோவையில் நடைபெற்றது. இந்து கடவுள்களை இழிவாகப் பேசும் தி.மு.க., தி.க.வினர் கிறிஸ்தவ, முஸ்லீம் சமயத்தைப் பழித்துப் பேசுவதில்லை என்று இந்த மாநாட்டில் கண்டித்தார்கள். அப்போது முஸ்லீம், கிறிஸ்தவ மதத்தினரைக் கிண்டல் செய்யும் வகையில் மாநாட்டில் பேசப் பட்டது.

இதன் எதிரொலியாக பா.ஜ.க. தலைவர்கள் ஜனா. கிருஷ்ணமூர்த்தி, திருக்கோவிலூர் சுந்தரம் உள்பட சிலர் கோவையில் காரில் சென்று கொண்டிருந்தபோது வெட்டப்பட்டார்கள். இதுதான் முஸ்லீம் தீவிரவாதிகளின் முதல் தாக்குதல்.

1984-ல் கோவையில் ஒரு நிகழ்ச்சியில் கலந்து கொண்டு விட்டு மதுரைக்குப் புறப்பட்டுச் சென்ற இந்து முன்னணித் தலைவர் ராம. கோபாலன் மறுநாள் காலை மதுரை ரயில் நிலையத்தில் வெட்டப்பட்டார். இந்த வழக்கில் கைது செய்யப்பட்ட பாஷாவை, ஐவிட்னஸ் இல்லை என்று சொல்லி நீதி மன்றம் விடுதலை செய்தது. இந்த பாஷாதான் இப்போதைய அல்-உம்மா அமைப்பின் தலைவர்.

1993 ஆகஸ்டு 8-ல் சென்னை ஆர்.எஸ்.எஸ். அலுவலகம் குண்டு வைத்துத் தகர்க்கப்பட்ட பிறகு, ஒவ்வோர் ஆண்டும் குண்டு வெடிப்புகளும் படுகொலைகளும் தொடர்ந்தன. 1993-ல் அப்போதைய கோவை போலீஸ் கமிஷனர் கணேசன் தலைமையிலான போலீஸ் தனிப்படை 'குட்டி பாகிஸ்தான்' என்று சொல்லப்படும் கோட்டை மேட்டில் அதிரடி சோதனை நடத்தி, ஏராளமான ஆயுதங்களைக் கைப்பற்றியது. இருபத்தியொரு பேர் மீது தடா வழக்குப் பதிவுசெய்யப்பட்டு பதினாறு பேர் கைதானார்கள். ஐந்து பேர் தலைமறைவாகி விட்டார்கள்.

கோட்டை மேட்டைச் சுற்றிலும் செக்போஸ்டுகள் அமைக்கப்பட்டன. தீவிர கண்காணிப்பு தொடர்ந்தது.

கடந்த பொதுத் தேர்தலில் வாக்குகள் எண்ணும் போது கோவை நாடாளுமன்ற சட்டப் பேரவைத் தொகுதிகளில் தி.மு.க. லீடிங் என்ற விஷயம் பரவியவுடன் கோட்டை மேடு செக்போஸ்டுகள் தகர்க்கப்பட்டன.

தி.மு.க. அரசு பதவி ஏற்ற பிறகு வழக்கை வாபஸ் பெற்று தடா கைதிகளை விடுதலை செய்தது. அல்-உம்மா, ஜிகாத் கமிட்டியின் சதிச் செயல்கள் தடையின்றித் தொடர்ந்தன.

கொடுங்கையூர் முத்தமிழ் நகர் வெடி குண்டுக் குவிப்புச் சதிக்கு அல்-உம்மா காரணம் என்று குற்றம்சாட்டப்பட்டாலும் இதன் தலைவர் பாஷா கைதாக வில்லை.

1997 நவம்பர், டிசம்பர் 1998 ஜனவரி, பிப்ரவரி எனத் தொடர்ந்து, கோவை போலீஸ்காரர் செல்வராஜ் கொலை, ராணுவத்தை அழைக்கும் அளவுக்குக் கலவரமாக வெடித்தது. பாண்டியன், சேரன், ஆலப்புழை எக்ஸ்பிரஸ் ரயில்களில் குண்டு வெடிப்பு; உடுமலைப்பேட்டையில் குண்டு வெடிப்பு, தஞ்சாவூர் சாலியமங்கலத்தில் வெடிகுண்டுக் கிடங்கில் குண்டுவெடிப்பு என சங்கிலித் தொடர் போன்ற சதிச் செயல்கள்... இதன் பின்னணியில் பாகிஸ்தான் உளவு அமைப்பு ஐ.எஸ்.ஐயின் தொடர்பு, அல்-உம்மா, ஜிகாத் கமிட்டியின் பங்கு பற்றியெல்லாம் தமிழக அரசின் கவனத்திற்கு வந்திருந்தும் ஏன் கண் மூடி, வாய் பொத்தி, கை கட்டி செயலற்று இருந்தது?

இந்த விரிவான பின்னணியைத் தமிழக அரசின் மிக உயர்ந்த பொறுப்புவகிக்கும் ஓர் அதிகாரியிடம் வினவி, 'ஏன் குண்டு வெடிப்புகளைத் தடுக்க முடியவில்லை?' என்று கேட்டோம்.

அரசின் இண்டலிஜன்ஸ் நெட்வொர்க் சரியில்லையா? அல்லது தகவல் கிடைத்திருந்தும், அரசு சரியான டைரக்ஷன் கொடுக்கவில்லையா? தமிழகம் முழுவதும் அடுத்தடுத்து முஸ்லீம் தீவிரவாதிகளை இப்போது கைது செய்யும் அரசு முன்னரே ஏன் நடவடிக்கை



• கோவையில் நடந்த குண்டுவெடிப்பு... (படம் : கா.க.வே.)

எடுக்கவில்லை? தேர்தல் முடியும் வரை ஒன்றும் செய்ய வேண்டாம் என்று அரசு முடிவு செய்திருந்ததா?

இந்தக் கேள்விகளுக்கு எல்லாம் நேரடியாகப் பதில் தராமல் மழுப்பினார் அதிகாரி. அரசாங்கத்தை நடத்திச் செல்லும் அதிகாரம் படைத்த அவரின் பதில்களில் அவரின் பதவிக்கு ஆபத்து வந்து விடக் கூடாது என்ற ஜாக்கிரதை உணர்வு தொனித்ததால், "என்னதான் செய்வதாக உத்தேசம்? மக்களைக் காப்பது அரசின் கடமை அல்லவா?" என்று வேண்டிக் கேட்டோம்.

"நான் எப்படிக் காப்பாற்றுவது... கடவுள் தான் காப்பாற்ற வேண்டும். நீங்கள் பத்திரிகையாளர் போல் பேசாமல் அரசியல்வாதி போல் பேசுகிறீர்களே!" என்று கோபப்பட்டார்.

கோவை தொடர் குண்டுவெடிப்பான சில முக்கியத் தகவல்கள் தொலைபேசியில் வந்து கொண்டிருந்த சூழ்நிலையில் நடைபெற்ற இந்தப் பேட்டியில் அந்த அதிகாரி சொன்ன விளக்கங்கள் :

"நாங்க முன்பே கைது செய்திருந்தால், ஏன் இப்ப கைது செய்தீங்க என்று கேட்பீர்கள்... இதையெல்லாம் என்னிடம் ஏன் கேட்கணும்...? நீங்க என்ன நினைக்கிறீர்களோ அதை எழுதுங்க... நான் பதவியை விட்டுப் போகணுமா...? முதல்வர் போகணுமா...?

"கேள்வி கேட்கிறது ஈஸி... இங்கே உட்கார்ந்து பார்த்தால்தான் எங்க பிரச்னைகள் உங்களுக்குப் புரியும்.

"பத்து நாளைக்கு முன்பே அலர்ட் பண்ணிட்டோம். நிறைய இடங்களிலே வெடிகுண்டு எல்லாம் கைப்பற்றி இருக்கோம். எங்கெங்கேயெல்லாம் குண்டு இருக்குன்னு எப்படித் தெரியும்...? நீங்க சொல்லுங்க... நாங்க போய் எடுக்கிறோம்... நாங்க என்ன நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று சொல்லுங்க...

"முன்னாடி குண்டு வெடிக்கலையா...? டெல்லியிலே குண்டு வெடிக்கலையா...? அதற்காக நான் குண்டு வெடிப்பை நியாயப்படுத்துறதா நினைக்காதீங்க. மனித வெடிகுண்டு என்பதெல்லாம் நிச்சயமா இல்லை...."

"போஸ்ட்மார்ட்டம் ரிப்போர்ட்டில் இது பற்றி ஏதாவது க்ளூ கிடைத்ததா?" என்று விசாரித்தோம்.

"எந்த க்ளூவும் கிடைக்கவில்லை..."

"கோட்டைமேடு செக்போஸ்ட்டுகள் தகர்க்கப்பட்ட விஷயம் பிறகு அங்கு ஃபாலோ-அப் நடவடிக்கைகள் பற்றி என்ன சொல்றீங்க...?"

"கோட்டைமேடு பற்றி எனக்குத் தெரியாது."

"அங்கே மறுபடியும் செக்-போஸ்ட் அமைத்து தீவிர கண்காணிப்பு இருக்குமா?"

"எலெக்ஷன் முடிந்த பிறகுதான் அது பற்றி முடிவு செய்ய வேண்டும்" என்று கூறிய அந்த அதிகாரி நிச்சயமாகத் தம் பெயரை வெளியிடக் கூடாது என்றும் தடை உத்தரவு பிறப்பித்து விட்டார். ●

— மு. சிவலிங்கம்

## என்னைச் செதுக்கிய எண்ணங்கள் - 8

# சோப்பு சொன்ன பாடம்!

எங்கள் எதிர் வீட்டில் நாங்கள் "மாமா" என்று மரியாதையுடன் அழைக்கும் பெரியவர் முத்தையா பிள்ளை குடி இருந்தார். சின்ன வயதில் எங்கள் கடையில் என் தந்தையிடம் வேலை பார்த்தவர். பின்னால் எனக்கு நினைவு வந்த காலத்தில் பணக்காரராக நிலம் நீச்சுடன் வாழ்ந்து வந்தார்.

அவர் எப்படிப் பணக்காரரானார் என்பது ஓர் அற்புதமான விஷயம். அப்போது, "சன்லைட் சோப்" என்ற துணிக்குப் போடும் பார் சோப்பும் வில்லை சோப்பும் மிகவும் பிரபலம். சன்லைட் சோப் கம்பெனி ஒரு பெரிய அகில இந்திய கம்பெனி.

முத்தையா பிள்ளை அவர்கள் சோப் தயாரிக்கத் தெரிந்திருந்த ஒரு சொந்தக்காரப் பையனை வைத்துக் கொண்டு, 'கிரவுன் மார்க்' சோப் என்று தயாரித்தார். அது





விலை குறைவு, பார்ப்பதற்கும் அழகாக, சுத்தமாக இருந்தது. துணியை வெளுப்பதில் சன்லைட் சோப்பை விட சக்கை போடு போட்டது. எனவே ஒரு கிராமத்தில் துவங்கிய அந்த கம்பெனியின் 'சோப்' தஞ்சை மாவட்டம் பூராவும் பிரபலமாகி விட்டது இரண்டாண்டுகளில்.

அவர் போட்டி போட்டதோ, ஒரு அகில இந்திய கம்பெனியுடன். சன்லைட் சோப் கம்பெனிக்காரர்களால் தஞ்சை மாவட்டத்தில் அவர்கள் பொருளை விற்க முடியவில்லை. சோப் விளம்பரத்திற்காக, மகாத்மா காந்தி, நேரு போன்றவர்களின் படங்கள் போட்ட காலண்டர்களை எல்லாம் அவர் எல்லோருக்கும் கொடுத்தார். சோப்புக் கட்டிகளை பாக்கெட்டில் போடும் வேலையை அருகிலிருந்த கிராமப் பெண்களுக்குக் கொடுத்தார். இது எனக்கு ஆச்சரியத்தையும் பெருமதிப்பையும் என்னுள் அவர்பால் ஏற்படுத்தியது.

நிறைய சம்பாதித்தார். இரண்டாவது உலக மகாயுத்தத்தின் போது (1932 வாக்கில்) தேங்காய் எண்ணெய்த் தட்டுப்பாடு காரணமாக சோப்பு கம்பெனியை மூடிவிட்டார்.

பார்ப்பதற்கு ராஜாஜி போல இருப்பார். அதே நிறம், உருவம் எல்லாம். ஒரு சமயம் நான் காலேஜில் படித்துக் கொண்டிருந்த போது, ஒரு நாற்பது பக்க நோட்டில் என்னென்ன காரியங்கள் செய்தால் இந்த நாடு முன்னேறும் என்று சட்டதிட்டங்களை எழுதி, என்னிடம் படித்துக் காட்டினார். எனக்கு வியப்பாக இருந்தது. "என்ன மாமா! நீங்கள் இங்கே குக்கிராமத்தில் இருந்து கொண்டு இவ்வளவு பெரிய விஷயங்களை எல்லாம் சொல்லிக் கொண்டிருந்தால் என்ன பயன்? இவைகளை எல்லாம் சென்னையிலும் டெல்லியிலும் உள்ள தலைவர்கள் அல்லவா எடுத்துக் கொண்டு செய்ய வேண்டும்" என்பேன். அவ்வளவு புத்திசாலி அவர்.

இன்று அவரை நினைக்கும் போது கூட "இவ்வளவு சிறந்த புத்திசாலிகள் இன்னும்



கிராமங்களிலே காட்டில் மலர்ந்த ரோஜாவாய், ஆழ் கடலில் விளைந்த முத்துக் களாய்ப் போய் விடுகிறார் களே" என்ற ஆதங்கம் தான் என்னுள் எழு கிறது.

அன்று தீபாவளி நாள். எங்கள் கடைக் கெதிரே நின்று கொண் டிருந்தார். அவரைச் சுற்றி என்னை விட வயதில் மூத்த - என் அண்ணன் வயது கொண்ட இளைஞர் கள். எனக்குப் பத்து வயது இருக்கும். "ஒரு கணக்குப் போடுகிறேன். யார் சரியாகச் சொல்கிறார் கள் பார்க்கலாம்! ஒரு மரத்தில் நூறு குருவிகள் இருந்தன. ஒரு வேடன் துப்பாக்கியால் அதைச் சுட்டான். ஒரு குருவி செத்துக் கீழே விழுந்தது. மீதி எத்தனை குருவிகள்?" என்றார்.

நான் உடனே, சட்டென்று "மீதி 99" என்று மகிழ்ச்சியோடு கூவினேன். ஆனால் மற்ற எல்லோரும் சிரித்தார்கள். எனக்கு விஷயம் புரியவில்லை. முத்தையா பிள்ளையோ, "நீ தான் சரி. நீதான் கெட்டிக்காரன்!" என்று என்னைத் தட்டிக் கொடுத்தார்.

பின்னால்தான் தெரிந்தது, "பதில் அது வல்ல, மற்ற குருவிகள் அனைத்தும், பறந்து ஓடி இருக்கும்! மரத்தில் பாக்கி ஒரு குருவியும் இருக்காது, என்பதுதான் சரியான விடை" என்று!

என் புத்திசாலித்தனத் தைக் கண்டு நானே மெச்சிக் கொண்டேன், வெட்கத்துடன்!

**நா**ன் எட்டாவது படித்ததும் என்னைக் கடையில்தான் போட வேண்டுமென்று பேச்சு எழுந்தது. எட்டாவது வரை நான் படித்த பள்ளி சுவாமி நாத ராவ் நடத்தி வந்த பள்ளி. செம்பொனார் கோவிலில் - இரண்டு மைல் தொலைவில் இருந்தது.

## டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி

ஒரு நாள் நான் என் தந்தையுடன் கடை விஷயமாக மாயவரம் சென்றபோது, என் உறவினரின் பெரிய மளிகைக் கடையில் நின்று கொண்டிருந்தேன். அவர் சொன் னார், "ஏய்! இங்கேதானே வரப்போகிறாய்? இந்தப் பட்டியலில் உள்ள சாமான்களின் விலையைக் கூட்டி சரி பார்!" என்று சொல்லி என் கையில் சாமான் பட்டியலைத் தந்தார்.

அவ்வளவு தூரம் என் எதிர்காலம் மளி கைக் கடைதான் என்று நிச்சயித்த பிறகும் எப்படி நான்



உயர்நிலைப் பள்ளியில் சேர்ந்தேன்? எனக்குப் படிக்க வேண்டும் என்ற ஆசை இருந்தது. அதைவிட தெருவில் உள்ளவர்கள் எல்லாம் "சின்னவன் நன்றாகப் படிக்கிறான்; அவனை நன்றாகப் படிக்க வையுங்கள்'' என்று சொல்லிக் கொண்டிருந்தார்கள். நான் மாயவரம் தேசிய உயர்நிலைப் பள்ளியில் மீண்டும் அதே எட்டாவது வகுப்பிலும், பிறகு மாயவரம் முனிசிபல் உயர்நிலைப் பள்ளியில் 9, 10, 11 வகுப்புகளிலும் படித்தேன்.

மாயவரம் தேசிய உயர்நிலைப் பள்ளியில் படித்தபோது ஒரு சம்பவம். ஆறாவது படித்த ஒரு சிறுவனை பள்ளி ஆசிரியர் கண்டபடி திட்டிவிட்டார். பையனுக்குக் கோபம் வந்து விட்டது.

பள்ளிக்குள்ளேயே உள்ள கிணற்றில் கை காலைக் கழுவிக் கொண்டு தன் பூணூலைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்து விட்டான். உட்காருமுன், "உங்களை என்ன செய்கிறேன் பாருங்கள்!" என்று சவால் விட்டு விட்டு



''இந்தப் பத்திரிகையில பக்கத்துக்குப் பக்கம் வித்தியாசம் இருக்கிறதாச் சொல்றாங்களே, என்னங்க அது?''

''பக்க நம்பர்தான். அது வித்தியாசமா இருந்துதானே தீரணும்!''

— எஸ். பாலாஜி

வகுப்பை விட்டு வெளியே வந்திருக்கிறான். சிறிது நேரத்தில் கண்களை மூடிக் கொண்டு உட்கார்ந்திருந்த அவனைச் சுற்றி ஏராள மாணவர் கூட்டம்! கடைசியாகத் தலைமை ஆசிரியர் வந்து அவனை சமாதானப்படுத்தி அழைத்துப் போனார்!

இந்தச் சம்பவம் ''ஏதோ ஒரு சக்தி மனிதன் கைக்குள் – நம் கைக்குள் – இருக்கிறது'' என்ற ஓர் உணர்வை எழுப்பியது. இது என் மனத்தில் ஆழப் பதிந்து விட்டது.

**மா**யவரம் உயர்நிலைப் பள்ளி புகழ் பெற்ற பள்ளிக்கூடம். ராகவ அய்யங்கார், என்.எஸ். கிருஷ்ணமூர்த்தி அய்யர் போன்ற ஜாம்பவான்கள் தலைமை ஆசிரியர்களாகப் பணியாற்றிய பள்ளி. எஸ். ராதாகிருஷ்ணன், எங்கள் பள்ளியின் ஆண்டு விழாவில் வந்து பேசி இருக்கிறார். பிரிக்கப்படாத சென்னை ராஜதானியில், எங்கள் பள்ளி மாணவர் தேர்வில் முதலிடத்தைப் பிடித்துக் கொண்டிருந்தது.

உயர் நிலைப் பள்ளியில் அப்போது இஷ்ட பாடம் என்று, சரித்திரம், கணக்கெழுதுதல் (Book Keeping), வேதியல் (Chemistry), இயல்பியல் (Physics) என்று பாடங்கள் இருந்தன. நான் வேதியல் பாடம் எடுத்துக் கொண்டேன். மாடியில் இருந்த ஆய்வுக் கூடத்தின் வேதியல் உபகரணங்கள், மற்றும் கண்ணாடிக் கூண்டில் வைத்திருக்கும் எடை பார்க்கும் கருவி இதெல்லாம் என்னை மிகவும் கவர்ந்தன. ஆனால் வேதியல் ஆசிரியரோ "ஏண்டா, இந்த வேதியல்? நீ என்ன கம்பவுண்டராகவா போகப் போகிறாய்?" என்று கேட்டார். அவரது ஆலோசனைகளையும் மீறி நான் அதில் சேர்ந்தேன். பள்ளிப் படிப்பு முடியும் போது வேதியலில் முதல் மார்க் வாங்கினேன்! ரவீந்திர நாத் தாகூர் எழுதிய புத்தகம் ஒன்றைப் பரிசாக அளித்தார்கள்.

எனது பதினோராவது வகுப்பு ஆசிரியர் ராமசாமி அய்யர். எளிமையானவர், அன்பானவர். நன்றாகப் பாடம் சொல்லிக் கொடுப்பார். வகுப்பில் ஒரு சமயம் கேட்டார். "கறுப்பாயிருக்கிற பையன் சிவப்பாய் இருக்கிற பெண்தான் வேணுமென்றால் எங்கே போவது? இவனோ கறுப்பு. இது என்ன நியாயம்?" என்று கேட்டார். மாணவர்களுக்குள்ளே அவருக்கு வீட்டில் நிறைய பெண்கள் என்ற பேச்சு!

தங்கவேல் பிள்ளை கணக்கு ஆசிரியர். கடுமையானவர். ஒரு சமயம் வகுப்பில் ஒரு மாணவன் வீட்டுக் கணக்கைப் போட்டுக் கொண்டு வரவில்லை.

"ஏண்டா வீட்டுக் கணக்கைப் போட்டுக் கொண்டு வரவில்லை?"

"நான் நேற்று பள்ளிக் கூடம் வரலை சார்!"

"ஓகோ! நீங்க வரலிங்களா? செருப்பிலே வெத்தலைப் பாக்கு வச்சு உங்க வீட்டுக்கு கணக்கைக் கொண்டாந்து கொடுத்திருக்குணுங்களா? கழுதை! ஏறுடா பெஞ்சி மேலே!" – இதுதான் தங்கவேல் பிள்ளை!

**மா**யவரம், கொரநாடு பள்ளியில் தேவ சகாயம் என்ற தலைமையாசிரியர் இருந்தார். அவரிடம் ஒரு பெண் அழுது கொண்டு







# ஆண்டிற்கு 12.5% என்றவாறு ஒரு உறுதிப்படுத்தப்பட்ட வருவாய் அனைத்து 5 ஆண்டுகளுக்கு.

**யூடிஐ -ன்**
**மந்த்லி**
**இன்கம்**
**பிளான் 98**

## ஆண்டைய வருமானம் மற்றும் ஆண்டிற்கு 13.24% வருவாய் க்யூமுலேடிவ் தேர்வு.

யூடிஐ-யின் மாதாந்திர வருமான திட்டம் 98 அனைத்து வயதினருக்கும் இளைஞர், நடுத்தர வயதினர் மற்றும் முதியோருக்கு ஒரு கவர்ச்சிகரமான ஒரு முதலீட்டு வாய்ப்பு ஆகும். இது உங்களுக்கு என்னவெல்லாம் தருகிறது என்பதைப் பாருங்கள்.

• **தேர்வுகள்** : மாதாந்தர வருவாய், வருடாந்தர வருவாய் மற்றும் க்யூமுலேடிவ் தேர்வுகள் • **மன்த்லி இன்கம் தேர்வு** : ஆண்டிற்கு 12.5% மாதாந்தரமாக அனைத்து 5 ஆண்டுகளுக்கு வழங்கப்படும் (வருடாந்தரமாக்கப்பட்ட ஆதாயம் 13.24%) பின் தேதியிட்ட மாதாந்தர வருமான விநியோக வாரண்டுகள் ஒவ்வொரு ஆண்டிற்கு முன்கூட்டியே அனுப்பப்படும் • **ஆன்யுவல் இன்கம் தேர்வு** : ஆண்டிற்கு 13.24% உறுதிப்படுத்தப்பட்ட வருடாந்தர வருவாய் அனைத்து 5 ஆண்டுகளுக்கு • **க்யூமுலேடிவ் தேர்வு** : ரூ. 5,000 முதிர்வுற்றதும் குறைந்த பட்சம் ரூ. 9,310 ஆகிறது • **மூலதன மதிப்புயர்வு** : அனைத்து மூன்று தேர்வுகளுக்கும் மூலதன மதிப்புயர்விற்கான வாய்ப்பு உண்டு

• **காலவரை** : அனைத்து மூன்று தேர்வுகளுக்கும் 5 ஆண்டுகள் • **பாதுகாப்பு** : திட்டத்தில் முதலீடு செய்த மூலதனம் முதிர்வடைந்ததும் பாதுகாக்கப்படும் என உத்தரவாதம் அளிக்கப்படுகிறது. திட்டத்தின் கீழ் உறுதிப்படுத்தப் பட்ட வருவாய் மற்றும் முதலீடு செய்யப்பட்ட மூலதனம் முதிர்வடைந்ததும் திரும்பி வழங்குவதை டிரஸ்டின் டெவலப்மென்ட் ரிசர்வ் ஃபண்ட் உத்தரவாதம் அளிக்கிறது • **ரொக்கமாக்கும் வசதி** : என்ஏவி அடிப்படையிலான விலையில் 3 ஆண்டுகளுக்குப் பிறகு மறு கொள்முதல் செய்யப்படும் மற்றும் நேஷனல் ஸ்டாக் எக்ஸ்சேஞ்சில் பட்டியலிடப்படும் • **குறைந்தபட்ச முதலீடு** : மாதாந்திர வருமானத் தேர்வு மற்றும் ஆண்டைய வருமான தேர்வின் கீழ் ரூ. 10,000 க்யூமுலேடிவ் திட்டத்தின் கீழ் ரூ. 5000 அதிக பட்ச உச்ச வரம்பு இல்லை • **வரிச் சலுகைகள்** : வருமான வரிச்சட்டம் 1961 ன் பிரிவு 80L, 48 மற்றும் 112 களின் கீழ் வரிச்சலுகை • **வரிக் கழிப்பு** : வருமான வரி சட்டம் 1961-ன் படி மூலாதார வரிக்கழிப்பு உண்டு.

வருமான வரிச் சட்டம் 1961 பிரிவு 54EA வின் கீழ் மூலதன ஆதாய வரிச் சலுகையும் கிடைக்கும்.

**யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா**
உங்கள் வளமான நாளைக்கு
திட்டம் : 28 ஜனவரி முதல் 13 மார்ச் '98 வரை.

முதலீடு நோக்கங்கள், முதலீடு மதிப்பீடு முறை மற்றும் காலவரை மற்றும் விற்பனை மற்றும் மறு கொள்முதல் என்பவை நிபந்தனைகளின் படி நிர்ணயிக்கப்படும்.

---

மியூச்சுவல் ஃபண்ட் மற்றும் செக்யூரிட்டிகளில் செய்யப்படும் அனைத்து முதலீடுகள் மார்க்கெட் ரிஸ்க்கிற்கு உட்பட்டவை மற்றும் திட்டங்களின் என்ஏவி செக்யூரிட்டி மார்க்கெட்டுகளை பாதிக்கும் காரணிகளால் ஏறவும் மற்றும் இறங்கவும் செய்யலாம். கடந்த கால செயலாற்றல் எதிர்கால விளைவுகளைக் குறிப்பிடுவதாகாது. மன்த்லி இன்கம் பிளான் 98 என்பது திட்டத்தின் பெயரே தவிர திட்டத்தின் தரத்தை அதன் எதிர்கால வாய்ப்பை அல்லது ஆதாயத்தை ஒரு வகையிலும் குறிப்பிடுவதாகாது. முதலீடு செய்வதற்கு முன் வழங்கு பத்திரத்தை கவனமாக படிக்கவும்.

மேலும் விவரங்களுக்கு தொடர்பு கொள்ளவும்: யூடிஐ அலுவலகங்கள் சென்னை போன்: 517101 / 517100 மதுரை போன்: 36186 திருச்சி போன்: 760080 கோவை போன்: 214973 யூடிஐ பேங்க் லி. சென்னை போன்: 8231085-89 அல்லது முக்கிய பிரதிநிதிகள் ஏஜெண்டுகள்.

CWPL/UTI/TAM/1007/98



"மானேஜர் எதுக்காக ஆபீசுக்கு அவரோட பேரக் குழந்தைகளையெல்லாம் கூட்டிட்டு வந்திருக்கார்?"

"நீங்க தினமும் ஆபீசுக்கு லேட்டா வர்றதுக்கு புதுபுதுசா காரணம், கதையெல்லாம் சொல்லுவீங்களே... அதை கேட்க வந்திருக்காங்க!"

— கொங்கணாபுரம் வே. செந்தில்

போனாள்.

"என்னம்மா, ஏன் அழுறே?"

"சார்! அவன் என்னிடம் காதல் கடிதம் குடுக்கிறான் சார்!" என்று மாணவன் எழுதிய காதல் கடிதத்தை தேவசகாயத்திடம் அந்தப் பெண் நீட்டினாள். படித்தார் அதை. பிறகு சொன்னார்.

"இதோ பார்! அந்தப் பையன் இப்போ என்ன செய்துட்டான்? உன் பேரில் ஆசை என்று எழுதி இருக்கிறான். வேறு ஒன்றும் இல்லையே. பதிலுக்கு உனக்கு அவன் மீது ஆசையா, இல்லையா என்று சொல்லிவிடு! அவ்வளவுதானே! அதற்குப் பிறகு அவன் உன்னிடம் ஏதாவது வாலாட்டினால் என்னிடம் சொல்! போ!" என்றார்.

இந்தச் சம்பவம் எங்கள் பள்ளி மாணவர்களிடையே வெகுவாகப் பரவியது. தேவசகாயத்திற்கு நல்ல பெயர்!

"நான் பள்ளிக் கூடத்தில் யாரையாவது காதலித்தேனா?" இது என்னைச் சந்திக்கும் பத்திரிகைக்காரர்கள் பலர் சில சமயங்களில் கேட்கும் கேள்வி.

பள்ளியிலும் சரி, கல்லூரியிலும் சரி எத்தனையோ அழகான பெண்கள் இருந்தார்கள். என்னுடன் படித்தார்கள். அவர்கள் எண்ணிக்கை மிகக் குறைவு. மனத்தில் ஆசை இருந்தது உண்மை. ஆனால் அது அத்துடன் போயிற்று. காரணம் கல்லூரியில், எங்கே மாணவர்கள் சகஜமாக மாணவிகளுடன் பேசிப் பழகலாமோ அங்கே கூட நான் அப்படி முனைந்ததில்லை. மாணவர்கள் அப்படி என்னதான் சொல்வார்களோ எனக்குத் தெரியாது. இந்தப் பெண்கள் எது சொன்னாலும் சிரித்துக் கொண்டிருந்தார்கள். அப்படி என்னதான் சொல்கிறார்கள் என்பது எனக்கு ஆச்சரியமான விஷயம். ஏனெனில் நான் மிகவும் சீரியசான மாணவன். "என்னை நீ காதலித்துத்தான் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும்" என்று விட்டிருந்தால் என்னால் யாரையாவது காதலித்து வசப்படுத்தியிருக்க முடியுமா என்பது எனக்கு இன்னும் சந்தேகம்தான்! நல்ல வேளை எனக்கு என் மாமன் மகளைக் கல்யாணம் செய்து வைத்தார்களோ, பிழைத்தேனோ!

நகைச்சுவை கடந்த ஒரு முக்கியமான விஷயத்தை இங்கே சொல்ல வேண்டும். வாழ்வில் முன்னேற்றம் எப்படி ஏற்படுகிறது? காரணம் என்ன?

என்னைச் சின்ன வயதிலிருந்தே "இவன் கெட்டிக்காரன்" என்று சொல்லி வளர்த்தார்கள். துணிக்கடைக்கு என் அம்மாவுடன் போனால் "குப்பாடம்பேட் போட்ட வேஷ்டியை எடுங்கள்" என்பேன். நான் அப்போது எட்டாவது வகுப்பு மாணவன். என் தாய், மகனுடைய இந்த 'ஞான'த்தைக் கண்டு அசந்து போய் விடுவார்கள்! இப்படி சின்ன வயதிலிருந்து தன்னைப் பற்றியே சிறுவர்களுக்கும் சிறுமிகளுக்கும் ஏற்படும் தன்னம்பிக்கை – தன்னைப் பற்றிய பெருமை – தன்னைப் பற்றிய உணர்வுதான், காலப் போக்கில் மனிதனை உயர்த்துகிறது என்று மனவியல் அறிஞர்கள் எழுதுகிறார்கள்.

கலிபோர்னியா பல்கலைக் கழகத்தில் ஒரு ஆராய்ச்சி செய்தார்கள். அதன்படி ஒரு இளைஞனுக்கு தன்னைப் பற்றி ஏற்படும் பெருமை, தான் கெட்டிக்காரன் என்ற நினைவு, தான் பிறரால் மதிக்கப்படுகிறோம், அழகுக்காக, படிப்பிற்காக, குணத்திற்காக, போட்டி பந்தயத்தில் ஜெயிப்பதற்காக என்று ஏதாவது ஒன்றில் மாணவனுக்கு ஏற்படும் ஒரு பெருமை உணர்வுதான் (Self Esteem) இளைஞனை, பெண்களை சாதனையாளர்களாக்குகிறது என்று கண்டு பிடித்தார்கள்.

அந்த எண்ணம், அவனை அதே போல – அதே ரீதியில் செயல்படத் தூண்டுகிறது என்கிறார்கள். என் அம்மா சின்ன வயதில் "உனக்கு தெய்வம் சரஸ்வதிதான்" என்று சொல்லி ஓர் அழகான சரஸ்வதி பொம்மையை வாங்கிக் கொடுத்தது இன்னும் நினைவில் இருக்கிறது. அவர்கள் என் மீது வைத்த நம்பிக்கையின் அடையாளமாக எங்கள் வீட்டில் நெடுங்காலம் இருந்தது.

(தொடரும்)




மணிமாலா
மாதாந்திர டெபாசிட் திட்டம்

**KVB மணிமாலா** – இதில் ஒவ்வொரு மாதமும் நீங்கள் டெபாசிட் செய்யும் சிறு தொகையானது, ஒரு சுமையாகவே தெரியாது. ஆனால் அது வளர்ந்து வளர்ந்து நாங்கள் வழங்கும் வட்டியுடன் சேர்ந்து மிகப் பெரும் தொகையாகப் பின்னர் உங்களுக்குக் கிடைக்கும்.

**KVB மணிமாலா.** மிகச் சிறிய விஷயம் என்றாலும், உங்கள் வாழ்வில் மிகப் பெரிய மாற்றத்திற்கு வழி வகுக்கும்.

Anugrah 2477/97

KVB
Since 1916

**தி கரூர் வைஸ்யா பேங்க் லிட்.**

கரூர் - 639 002

A.D. நவநீதன்
சேர்மன்

**நாளும் நம்பிக்கை வளர்க்கும் வங்கி**

# 'வால்' அண்டன்

"சோனியா, இத்தாலியரா? இந்தியரா?" இதுதான் இன்றைக்கு அனைத்து அரசியல்வாதிகளையும் ஆட்டிப்படைக்கும் தலையாய பிரச்னை! பி.ஜே.பி.காரர்களை விட்டுத் தள்ளுங்கள்; நம் சரத் பவார் எந்த அளவுக்கு ஆராய்ச்சியில் இறங்கியிருக்கிறார் பாருங்கள் - "ஒரு பெண்ணின் கழுத்தில் தாலி ஏறிய மாத்திரத்தில் அவள் தன் சொந்த பந்தங்களை எல்லாம் நீத்து, கணவன் வீட்டாருடன் ஐக்கியமாகி விடுகிறாள் என்பதுதானே நம் இந்தியப் பண்பாடு! அந்த வகையில், சோனியா, ராஜீவின் கைப் பிடித்த அன்றே இந்தியப் பெண்ணாகிவிட்டார். ஏன் நாம் வழிபடும் அன்னை சீதாவும் நேபாள தேசத்தைச் சேர்ந்தவர்தானே? அவர் நேபாளத்தில் பிறந்து வளர்ந்தாலும், இராமனை மணந்த காரணத்தால் நாம் அவரை இந்தியராக ஏற்றுக் கொள்ளவில்லையா? சீதைக்கொரு நியாயம்; சோனியாவுக்கு ஒன்றோ?" என்று காரசாரமாக வாதாடுகிறார் - பாயிண்டைப் பிடிக்க எங்கியோ போயிட்டீங்க தலைவா!



• சரத் பவார் : சோனியாவின் வக்கீல்!

## தேர்தல் 'பல்ஸ்'!

தேர்தலை ஒட்டி நிகழ்த்தப்பட்ட கணிப்புகளின்போது வெளியான சில சுவையான தகவல்கள் - மும்பையின் வடகிழக்குப் பகுதியில் பிரமோத் மஹாஜனும் (பி.ஜே.பி.) குருதாஸ் காமத்தும் (காங்.) மோதுகிறார்கள். ஆட்டோக்காரர்கள் அதிகமிருக்கும் பகுதிக்குச் சென்று "உங்கள் வோட்டு யாருக்கு?" என்று கேட்டிருக்கிறார்கள். "நாங்கள் வீர மராத்தியர்! மராத்தியருக்குத்தான் வோட்டுப் போடுவோம்" என்ற பதில் வரவே, "வேட்பாளர்கள் இருவருமே மண்ணின் மைந்தர்கள்தான்" என்பதை வலியுறுத்தியிருக்கிறார்கள். ஆழ்ந்த யோசனைக்குப் பிறகு வந்த குசும்புத்தனமான தீர்ப்பு: "ம்... இரண்டு பேருக்குமே போட்டுவிட்டால் போயிற்று!" குடிசைக் குடியிருப்புகள் பகுதியில் கருத்துக் கணிப்பெடுத்தபோது, இளம் வயதுப் பெண்கள் யாருமே கருத்துத் தெரிவிக்காதது வியப்பாயிருந்ததாம்; விசாரித்ததில் கிடைத்த 'திடுக்' தகவல் - இங்கே திருமணமாகாத பெண்கள் யாரும் வோட்டுப் போட மாட்டார்களாம்; அம்மி மிதித்த பின்தான் வோட்டுச் சாவடியை மிதிப்பார்களாம்! இந்த அழகில் வேட்பாளர்களின் வெற்றி தோல்வியை நிர்ணயிப்பது என்னவோ பாமரர்கள்தான்!

## கொடுக்கல் – வாங்கல்

தமிழகத்துப் புறாக்கள் மும்பையில் சிறகடிப்பதும், மும்பைக் கிளிகள் அங்கே கொஞ்சுவதும் திரை உலகில் சகஜமாயிருந்தது! இந்தக் கொடுக்கல் வாங்கல் பிஸினஸ் இப்போது அரசியலையும் தொற்றிக் கொண்டு விட்டது! அங்கிருந்து ஏற்றுமதியான கட்-அவுட் கலாசாரம் இங்கே தன் ஆதிக்கத்தை ஆரம்பித்திருக்கிறது; அவரவர் 'மவுசு'க்குத் தகுந்த மாதிரி சிறிய, பெரிய, கட்-அவுட்கள் நிற்க ஆரம்பித்து விட்டன. முந்தைய தேர்தலின் போது ரூ. 200க்கு கட்-அவுட் செய்தவர்கள், இன்று ரூ. 1000க்கு செய்கிறார்கள்! இந்த கட்-அவுட் கலாசாரத்துக்குப் பதிலாக தமிழகத்தில் இங்கிருந்து ஷூட்-அவுட் கலாசாரத்தை இறக்குமதி செய்து கொண்டிருக்கிறார்களா என்ன? மும்பையில் வரிசையாகக் குண்டு வெடித்தது போல், கோவையிலும் நிகழ்ந்திருக்கிறதே!

## குளிர் விட்டது!

சென்ற வருடம், அண்டர்வர்ல்ட் குண்டர்கள் நடுங்குமளவுக்குப் போலீஸின் கை ஓங்கியிருந்தது! என்கௌண்டர் மரணங்கள் உச்சத்தை (70) த் தொட்டன. ஆனால் இந்த வருடம் நிலைமை தலைகீழ்! என்கௌண்டர் என்ற பெயரில் பல நிரபராதிகள் கதை முடிக்கப்பட்டதாக மனித உரிமைக் கழகமும், பாதிக்கப்பட்டோர் குடும்பங்களும் எக்கச்சக்கமாக வழக்குகள் தொடுக்க, போலீஸார் பேசாமல் கையைக் கட்டிக் கொண்டிருப்பதென்று முடிவு செய்து விட்டனர். விளைவு? அண்டர்வர்ல்டுக்கு ஜுரம் விட்டு விட்டது. ஜாலியாகக் கிளம்பி விட்டார்கள். 'கொலை ரவுண்ட் ஸ்கோர்!' சென்ற இரண்டு மாதங்களில் வரிசையாக ஐந்து கொலைகள் - மனிஷ் ஷா, மனியா ஜிங்காரே, விவித் ஷா, தினேஷ் ஜதார், வசந்த



# கொண்டாட்டங்கள்!

வால் ஷா என தீர்த்துக்கட்ட ஆரம்பித்து விட்டார்கள்; எல்லாம் "கேங்வார்" கொலைகள்! உயிருக்குப் பயந்து, வெளியே வரவே நடுங்கி, சிறையே மேல் என அடைந்து கிடந்த ரௌடிகள் எல்லாம் இப்போது தைரியமாக 'பெயில்' அப்ளிகேஷன் கொடுக்க ஆரம்பித்து விட்டார்களாம். தேர்தல் சமயத்தில், இப்படி ஒரு விபரீதம் மும்பைக்குத் தேவையா?

## இருள் முகங்கள்

**அ**ண்மையில், மும்பையைக் கதி கலங்க வைத்த சம்பவம் – வி.பி. ரோட் போலீஸ் ஸ்டேஷனிலிருந்து, கல்லெறி தூரத்திலிருந்த 'முகுந்த் மான்ஷன்' கட்டடத்தில், மூன்றாவது மாடியில், பட்டப்பகலில் விமலாதாகா என்ற 32 வயது குடும்பத் தலைவியும், அவரது ஒன்பது வயது மகள் பூஜாவும் படு பயங்கரமாகக் கொல்லப்பட்டு, வீட்டிலிருந்த நகை, நட்டு, பணம் (75,000) முதலியவை கொள்ளையடிக்கப் பட்டிருந்தன. டென்த் பரீட்சைக்கான 'பிரிலிம்ஸ்' எழுதிவிட்டு, பள்ளியிலிருந்து வீடு திரும்பிய மகன் மனீஷ், கதவு திறக்காததால் தந்தைக்கு ஃபோன் செய்து, மறு சாவி வரவழைத்து கதவைத் திறந்தால்... இந்த கோர காட்சி! கொலைகாரர்கள் இவர்களுக்குத் தெரிந்தவர்கள் என்பதற்குச் சான்றாக வரவேற்பறையில் காலியான இரண்டு டீ கப்புகளும், பாதி சாப்பிட்ட பிஸ்கட்டுகளுமிருந்தன. 'இனிப்பிட்டவருக்கே துரோகம் செய்யுமளவுக்கு இவ்வளவு மட்டமான மனிதர்களா?' என்று புலம்பாதவர்களில்லை! அருள் தரும் அன்னை மகாலக்ஷ்மி கோலோச்சுமிடத்தில் இப்படியும் சில இருள் முகங்கள்!

## 'வால்' அண்டைன் டே!

“**ந**ம் வசந்த பஞ்சமியை மறந்துவிட்டு, இதென்ன 'வேலண்டைன் டே' என்று பணத்தை வாரி இறைத்துக் கொண்டு" எனப் பெற்றோர்கள் முணுமுணுக்க, "பிப்ரவரி 14 சந்த் நரஹரி தினம்! அவரை விட்டு விட்டு அதென்ன மேனாட்டு செயின்டுக்கு முக்கியத்துவம் கொடுத்துக் கொண்டு" என, இந்தியக் கலாசாரத்தை குத்தகை எடுத்திருக்கும் பிரமோத் நவால்கர் புலம்ப, காதலர்கள் தினம் மும்பை இளசுகளிடையே சூடு பிடித்தது – கார்டுகள் என்ன, அன்பளிப்புகள் என்ன, டிஸ்கொதேக்களில் விசேஷ சலுகைகள் என்ன, செய்தித் தாள்களில் 'மெஸேஜ்'கள் என்ன, நடைபாதையெல்லாம் 'இதயங்'களென்ன... தூள்தான்!

மீடியாவின் துணையுடன், 'வேலண்டைனை' வளைக்கும் நூதன விதங்களைக் கற்ற இளம் ஹீரோ ஒருவர், பஸ் ஸ்டாண்டு காதலியிடம், "என் ஃபோன் நம்பரைத் தொலைத்து விட்டேன்; உன்னுடையதைக் கடனாகத் தர முடியுமா?" என டயலாக் அடிக்க, அவளும் சிரித்துக் கொண்டே தன் 'நம்பரை' கொடுக்க, வானத்தை நோக்கி மண்டியிட்டு, பூமியை முத்தமிட்டு, வெற்றிக்களிப்பில் வீட்டுக்கு வந்த இளைஞன், ஆர்வத்துடன் நம்பரை டயல் செய்ய, மறுமுனையில் "யெஸ்.... விஜய் நகர் போலீஸ் ஸ்டேஷன்" என்ற குரல் கரகரத்தது! சரியான "வால்" அண்டைன்தான்!

மும்பையிலிருந்து : **ஜெயஸ்ரீ ராஜ்**

# நினைவுகளே சுகமாக...



மெயின் ரோட்டிலிருந்து விலகி ரயில்வே ஸ்டேஷனுக்குப் போகிற மண் சாலையில் காலடி வைத்தாள் மைதிலி.

அந்த மண் சாலைக்கு இணையாக தெற்கும் வடக்குமாக நீண்டு சென்ற தண்டவாளத்தையும், சற்று தூரத்தில் மரங்களின் மறைவில் தெரிந்த ஸ்டேஷன் கட்டடத்தையும் பார்த்தவுடன் அவள் உடம்பிலும், மனத்திலும் ஒரு புத்துணர்ச்சி ஏற்பட்டாற் போலிருந்தது.

இப்படி ஒரு சந்தோஷத்தை அனுபவிக்கத்தான் அவசரமாக வந்திருக்கிறாள் அவள்.

"இப்ப ஏன் உங்கம்மா வீட்டுக்குப் போகணும்னு துடிக்கிறே? நான் மூணு நால்ல பெங்களூர்லேருந்து திரும்பிடுவேன். அதுவரை தனியா இருக்க பயமா?" என்று அவள் கணவன் ரவி கேட்டபோது மைதிலி பிடிவாதமாகச் சொன்னாள்.

"சேச்சே... அதெல்லாம் இல்லை. எனக்கு எங்க ஊருக்குப் போனாப் போதும்னு இருக்கு!"

"ஏன் மெட்ராஸ் உனக்குப் பிடிக்கலையா?"

பிடிக்கவில்லை என்று அவனுக்கு எப்படிப் புரியவைப்பது என்று விழித்தாள் அவள்.

அவள் பிறந்தது, வளர்ந்தது, வாழ்ந்தது எல்லாம் கிராமத்தில். அதுவும் தஞ்சாவூர் மாவட்டக் கிராமம். காவிரி பாய்கிற ஊர்.

அங்கே ரயில்வே ஸ்டேஷனுக்குப் போகிற மண் சாலையில், ரயில்வே லைனைப் பார்த்தபடி ஒரு தோட்டத்திற்கு மத்தியில் அவள் வீடு இருக்கும்.

மண்சாலைக்கும், வீட்டுக்கும் நடுவே ஒரு வாய்க்கால். அதில் ஒரு மூங்கில் பாலம்.

வீட்டின் முன்பக்கம் கனகாம்பரமும், நந்தியாவட்டையும் பூத்திருக்கும். இன்னொருபுறம் கத்தரியும், வெண்டையும் பூத்தோ, காய்த்தோ கிடக்கும்.

எல்லாம் அவள் கைவண்ணம்.

அந்தச் செடிகளுக்கு வாய்க்காலிலிருந்து வாளி வாளியாகத் தண்ணீர் எடுத்து ஊற்றுவாள் மைதிலி. எவ்வளவு தண்ணீர் ஊற்றினாலும் திருப்தியே வராது அவளுக்கு. இன்னும் இன்னும் ஊற்ற வேண்டும்



என்றே ஆசைப்படுவாள்.

கொல்லையில் ஒரே மரங்கள்மயம்.

கிணற்றடியில் இரண்டு நெல்லி மரங்கள். சற்றுத் தள்ளி ஒரு முருங்கை. அப்புறம் பூவரசு. ஏழெட்டு வாழைகள். கொல்லைக் கடைசியில் மூங்கில்கள்.

எப்போதும் நிழல். கண்களும், மனமும் நிறைந்து போகிற மாதிரி குளிர்ச்சி.

ஆனால் அவள் திருமணமாகி சென்னையில் குடியேறியிருப்பது அடுக்கு மாடிக் கட்டடத்தின் உச்சியில் ஒரு ஃப்ளாட்டில்.

அது ஒரு வீடாகவே தோன்றவில்லை அவளுக்கு. கொல்லையோ, திண்ணையோ இல்லாத கூண்டு ஒன்றில், அந்தரத்தில் மாட்டிக் கொண்டு விட்டது போல இருந்தது.

சென்னைக்குத் தனிக்குடித்தனம் வந்த இந்த நான்கு மாதங்களில் ஒவ்வொரு நாளும் ஏதாவது ஒரு தருணத்தில் அவளுக்குத் தன் பிறந்தகத்து நினைவு வந்து கொண்டே இருந்தது.

செடிகொடிகள் சூழ, நிழல்களால் நிரம்பி, பசுமையும் குளிர்ச்சியும் அரவணைத்திருந்த அந்த ஓட்டு வீட்டையும், அங்கே வாழ்ந்த இருபத்தி நான்கு வருட வாழ்க்கையையும் நினைத்தபோது அவள் மனம் இருப்புக் கொள்ளாமல் தவித்தது.

**சி. என். ராஜராஜன்**

'எத்தனை இனிமையான வாழ்வுக் காலம் அது!'

அங்கே சாதாரண சப்தங்களும் கூட சங்கீதமாக இருக்கும் அவளுக்கு.

கிணற்று ராட்டின ஓசை, அம்மா துணிகளை 'தொப் தொப்' என்று அடித்துத் துவைக்கிற சப்தம், பலமான காற்றில் மூங்கில்களின் இன்னிசை, அப்புறம் ஸ்டேஷனில் அடிக்கிற மணி ஓசை... எல்லா வற்றிற்கும் மேலாக ரயிலின் பேரோசை...

அவளுக்கு ரயிலை ரொம்பவும் பிடிக்கும்.

தினம்தோறும் ரயில்கள் அவளது பார்வையில் பட்டபடி இப்படியும், அப் படியுமாகப் போய் வந்து கொண்டிருந்தன.

ஒவ்வொரு தடவை பார்க்கும்போதும், ஏதோ முதன் முறையாகப் பார்க்கிற மாதிரியே ரயிலைப் பார்ப்பாள். எந்த ஊருக்குப் போனாலும் ரயிலில் போய் வரவே ஆசைப்படுவாள்.

"என்ன பதிலையே காணோம்? மெட் ராஸ் உனக்குப் பிடிக்கலையா?"

"பிடிக்கலைதான். எனக்கு எங்க ஊர்தான் பிடிச்சிருக்கு."

"அந்தப் பட்டிக்காட்ல போரடிக்காதா உனக்கு?"

"என்ன இப்படிக் கேட்டுட்டீங்க? அங்கே கிடைச்ச சந்தோஷம் இங்கே கிடைக்குமா? அங்கே போய் நான் வளர்த்த தோட்டத்தைச் சுத்திப் பார்ப்பேன். பூச் செடிகளுக்குத் தண்ணி ஊத்துவேன்.

**"தொண்டர்களே! எனக்கு விலை யுயர்ந்த சால்வையை அணிவிக்க வேண் டாம்னு நான் கேட்டுக்கிட்டது உண்மை தான். அதுக்காக சாக்குப் பையைப் போர்த்தறது கொஞ்சம் கூட நல்லா இல்லே!"**

**– கொங்கணாபுரம் வே. செந்தில்**



நெல்லி மரத்திலேருந்து நெல்லிக்காய் பறிப்பேன். எங்க வீட்டுக்கு எதிர்ல ஒரு அரசமரம் இருக்குல்ல... சின்ன வயசில் அந்த மரத்தடியில்தான் தெருப்பிள்ளை களோடு விளையாடுவேன். அப்ப எனக்கு ரொம்பப் பிடிச்சது ரயில் விளையாட்டு தான்!"

"சரிதான். இப்ப மறுபடி ரயில் விளை யாட்டு விளையாட ஆசையா இருக்கா?" என்று ரவி சிரித்தான்.

அதைக் கேட்டு அவளுக்கும் சிரிப்பு வந்தது.

"இனிமே அந்த மாதிரியெல்லாம் விளையாட முடியுமா? அந்தக் கால மெல்லாம் போயிடுச்சு. ஆனா அந்த ஞாபகங்கள் மட்டும் மனசில் அப்படியே இருக்கு. அதையெல்லாம் நினைச்சுப் பார்த்தா ரொம்ப சந்தோஷமா இருக்கு. மறு படியும் அந்த வாழ்க்கை கிடைக்காதான்னு ஏக்கமா இருக்கு. அந்த மரத்தடியில் போய் நின்னுட்டா அந்தக் காலத்துக்கே நான் திரும்பிப் போய்ட்ட மாதிரி இருக்கும்!" என்றாள் மைதிலி.

அப்போது ரவி சப்தமாகச் சிரித்தான்.

"மெட்ராஸ் வெயில் உனக்கு ஒத்துக் கலை. அதான் இப்படிப் பேசறே?"

அவள் அவனது கிண்டலை லட்சியம் செய்யாமல், தன் லயிப்பிலிருந்து விடுபடா மலேயே தொடர்ந்தாள்.

"பழசை, பால்ய காலத்தை நினைச்சுப் பார்க்கிறது எவ்வளவு இனிமையான விஷ யம் தெரியுமா!"

யோசித்தபடியே நடந்து கொண்டிருந்த மைதிலி தன் வீடு வந்ததும் சுயஉணர்வு பெற்றாள்.

வாசலிலேயே அம்மாவும், அப்பாவும் அவளைப் பார்த்து விட்டார்கள்.

அம்மா வேகமாக அவளை நெருங்கி சூட்கேஸை வாங்கிக் கொண்டாள்.

"வா மைதிலி, மாப்பிள்ளை வரலியா?"

"ஆமாம்மா" என்றவள் அப்பாவிடம் வந்தாள்.

"சௌக்கியமா இருக்கீங்களாப்பா?"

"ம்... ம்... நீ எப்படிம்மா இருக்கே? மாப்பிள்ளை வரலியா?"

"அவர் ஆபீஸ் வேலையா பெங்களூர் போயிருக்கார். வர மூணு நாளாகும். எனக்குத் தனியா இருக்கப் போரடிச்சது. அதான் வந்தேன்" என்றவள் திரும்பி கன காம்பரச் செடிகளைப் பார்த்தாள்.

"அம்மா.. இதுக்கெல்லாம் தினமும்

தண்ணி ஊத்தறியா?"

அம்மா புன்சிரிப்புடன், "ம்ம்... ஊத்திக்கிட்டுத்தான் இருக்கேன். சரி வா" என்று வீட்டுக்குள் போக, மைதிலி தொடர்ந்தாள்.

"மைதிலியா? வா வா..." என்ற அண்ணி அவளை நெருங்கி அன்போடு கைகளைப் பற்றிக்கொண்டு அவளை ஏற இறங்கப் பார்த்தாள்.

"ஏதும் விசேஷம் உண்டா?" என்று கேட்டாள் குரலைத் தணித்து.

மைதிலி வெட்கத்துடன் புன்னகைத்தாள்.

"நீங்க நினைக்கிற மாதிரி ஒண்ணுமில்லை."

"மாப்பிள்ளை எங்கே?" என்றபடி அண்ணி வாசலை எட்டிப் பார்த்தாள்.

"அவர் ஆபீஸ் வேலையா பெங்களூர் போயிருக்கார். வர மூணு நாளாகும். அதான் நான் கிளம்பி வந்தேன்."

"ஒரு லெட்டர் கூட போடாம திடீர்னு வந்திருக்கியே... இரு மைதிலி காப்பி கொண்டு வரேன்" என்று உள்ளே போனாள்.

மைதிலி அவசரமாக புழக்கடைக் கதவைத் திறந்து கொல்லைக்குப் போனாள்.

அந்தியின் பரிபூரணமான அமைதியில் ஆழ்ந்து சலனமற்றிருந்தது கொல்லை.

கிணற்றடிக்கு வந்தாள் மைதிலி.

தரையின் ஈரம் பட்டு உள்ளங்கால் சில்லென்றது.

துணி துவைக்கும் கல் அவள் பார்வையில் பட்டது.

பள்ளி நாட்களில் அந்தக் கல்லின் மேல் அமர்ந்து தமிழ்ச் செய்யுட்களை வாய் விட்டுப் படித்து மனப்பாடம் செய்வாள் அவள்.

நிமிர்ந்து நெல்லி மரங்களைப் பார்த்தாள்.

"என்ன மைதிலி, இருட்டுற நேரத்துல கொல்லைல வந்து நின்னுக்கிட்டு" என்ற அம்மாவின் குரல் கேட்டுத் திரும்பினாள்.

"அம்மா... நெல்லி மரத்துல காய் இருக்கா?"

"இருக்கு இருக்கு. அதைக் காலைல பார்த்துக்கலாம் வா."

அண்ணி தந்த காப்பியைக் குடித்துக் கொண்டிருந்த போது ரயில் சப்தம் கேட்டது.

அந்தச் சப்தத்தால் இழுக்கப்பட்டவள் மாதிரி மைதிலி விரைந்து வாசலுக்குப் போய் நின்று கொண்டாள்.

திருப்பதி எக்ஸ்பிரஸ் பெரிய இரைச்சலோடு அவள் கண்களுக்குப் பிடிபடாமல், அந்த ஸ்டேஷனைக் கடந்து போயிற்று.

அந்த ரயில் சப்தத்தையே சுவாசித்து வாழ்பவள் மாதிரி மைதிலி அப்படியே பிரமையுடன் நின்றிருந்தாள்.

பிறகு வீட்டின் எதிரிலிருந்த அரச மரத்தடியில் வந்து நின்றாள்.

தெரு விளக்கின் வெளிச்சத்தில், அந்த மரத்தடி அவள் மனத்தில் எத்தனை எத்தனையோ ஞாபகங்களைத் தட்டி எழுப்பியது.



"ஏங்க, இலவசமா நான் வாங்கிண்டு வந்த கர்சீப்புகள் ரெண்டும் ரொம்ப நல்லா இருக்குதில்லே!"

"சரி, சரி, காசு கொடுத்து வாங்கின ரெண்டு புடைவைகளையும் காட்டித் தொலை!"

– வி. ரெங்கநாதன்

அவள் மனம் ஒருகணம் விம்மியது. மறுகணம் கொஞ்சம் கொஞ்சமாக சந்தோஷம் அதிகமாகி மனம் முழுவதிலும் நிரம்பி, அப்படியே அது கண்ணீராக வழியப் பார்த்தது.

இரவு எட்டு மணிக்கே சாப்பாடு முடிந்து தாழ்வாரத்திலேயே படுத்துக் கொண்டாள் மைதிலி.

நெடு நேரமாகியும் தூக்கம் வரவில்லை அவளுக்கு.

பழைய நினைவுகள் பலவும் அவளுக்குள் வந்து போய்க் கொண்டிருந்தன.

சுவர்க் கடிகாரம் பதினோரு மணி அடித்ததும் எழுந்து உட்கார்ந்தாள் அவள்.

வாசல் கதவு திறந்திருந்ததைப் பார்த்தாள். பேச்சு சப்தம் மெல்லக் கேட்டது.

'இன்னுமா தூங்காமல் பேசிக் கொண்டிருக்கிறார்கள்!' என்று நினைத்து எழுந்து

போனாள்.

வாசலை நெருங்கியவள் அப்படியே நின்று விட்டாள்.

அங்கே அவளைப் பற்றித்தான் பேச்சு நடந்து கொண்டிருந்தது.

மைதிலி அவர்கள் பார்வையில் படாமல், அனிச்சைச் செயலாக நின்றுவிட, அவர்கள் பேசுவது அவளுக்குத் தெளிவாகக் கேட்டது.

"ஒரு லெட்டர் கூடப் போடாம, மாப்பிள்ளையும் கூட வராம தன்னந் தனியா, கையில் ஒரு சூட்கேஸோட திமுர்னு வந்து மைதிலி நின்னதைப் பார்த்ததுமே எனக்கு 'திக்'குன்னு ஆயிடுச்சு. அவ முகத்தைப் பார்த்தா பேயடிச்ச மாதிரி இருக்கு. மலங்க மலங்க முழிக்கிறா. வந்ததும் வாசல்லயே நின்னுக்கிட்டு 'கனகாம்பரச் செடிக்கு தண்ணி ஊத்தறியா'ன்னு எங்கிட்ட கேக்கறா. எது கேட்டாலும் மழுப்பலா பதில் சொல்றா. வீட்டுக்குள்ள போனதும் என்ன பண்ணினா தெரியுமா? நேரா கொல்லைக்குப் போய் நின்னு கிணத்தையே வெறிச்சுப் பார்க்கறா!" என்று அம்மாவின் குரல் கவலையுடன் வெளிப்பட்டது.

அப்போது அண்ணன் குறுக்கிட்டான்: "கல்யாணத்துக்குப் போடறதாகச் சொன்ன நகையிலே இரட்டை வடம் சங்கிலி பாக்கி இருக்கு... அதை ஞாபகப்படுத்தத்தான் மாப்பிள்ளை அவளை அனுப்பி வச்சிருக்காரோன்னு நினைக்கறேன்."

"இப்ப என்ன பண்றது? ஆயிரம் ரெண்டாயிரத்துக்குக் கூட இப்ப வழியில்லையே" என்றார் அப்பா கவலையாக.

"அவ திரும்பிப் போறதுக்காக வந்திருக்காளா? அல்லது..."

மைதிலிக்கு அந்தக் கணத்தில்தான் நிகழ்காலம் என்பதே நினைவுக்கு வந்தது. தன் வருகை அவர்களை எப்படிக் கலவரப் படுத்திவிட்டது என்பதை எண்ணி திகைத்துப் போனாள் அவள்.

அவர்களது லௌகிகக் கவலைக்கு முன் தனது எல்லாச் சந்தோஷங்களும் அர்த்த மற்றுப் போய் விட்ட மாதிரி இருந்தது அவளுக்கு.

என்ன சொல்லி அவர்களுக்கு விளக்குவது என்று அவளுக்குள் ஒரு கவலை ஏற்பட்டது.

இப்படி ஓர் சூழலில், தான் இங்கே வராமலேயே இருந்திருக்கலாம் என்று அப்போதுதான் அவளுக்குள் ஒரு குற்ற உணர்வு தோன்றியது.

அவர்கள் பார்வையில் படாமல் ஓசையின்றி மெல்லத் திரும்பி நடந்தாள் மைதிலி.

அப்போது அவளுக்குப் பிடித்தமான ரயிலோசை - எங்கோ போகிற ஏதோ ஒரு எக்ஸ்பிரஸ் தூரத்தில் வருகிற சப்தம் - அந்த இரவைத் துளைத்து ஊடுருவிக் கொண்டு வந்து அவளுக்குக் கேட்டது. ○

## உலகிலேயே சின்னது!



உலகிலேயே மிகச் சின்ன ஸ்டீம் எஞ்சின் இதுதான். 3 மி.மீட்டர் பிஸ்டன். 4.5 கியூபிக் சென்டிமீட்டர் தண்ணீர் கொள்ளும் பாய்லர். 2400 ஆர்.பி.எம். சுழற்சித்திறன் உள்ள எஞ்சின். இது இயங்கினால் உற்பத்தியாகும் மின்சாரம் காரணமாக எரியும் குட்டி பல்பு. மிக மெல்லிய பித்தளைத் தகட்டில் உருவாக்கியிருப்பவர் ருடால்ஃப் பாரன். ஓய்வு பெற்ற இஞ்சினியர். ஜெர்மனியிலுள்ள மியூனிக்நகரவாசி. வயது எண்பத்தொன்று! இதை உருவாக்க ருடால்ஃப் மொத்தம் 250 மணி நேரம் செலவிட்டிருக்கிறார். 'கின்னஸ் புக்கில் பதிவு பெறும் என்று காத்திருக்கிறார்!

— நம்பி



# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி நூற்றாண்டு 1899-1999 100

கல்கி கலெக்ஷன்

பதினைந்தாம் அத்தியாயம்

## வானதியின் ஜாலம்

இளையபிராட்டி குந்தவை தேவியும் கொடும்பாளூர் இளவரசி வானதியும் ரதத்தில் ஏறிக் குடந்தை நகரை நோக்கிச் சென்றார்கள் அல்லவா? அதன் பிறகு படகில் இருந்த பெண்கள் என்ன பேசினார்கள், என்ன செய்தார்கள் என்பதை நாம் சிறிது தெரிந்து கொள்ள வேண்டும்.

"அடியே, தாரகை!, இந்தக் கொடும்பாளூர்க்காரிக்கு வந்த யோகத்தைப் பாரடி! அவள் பேரில் நம் இளைய பிராட்டிக்கு என்னடி இவ்வளவு ஆசை?" என்றாள் ஒருத்தி.

"ஆசையுமில்லை, ஒன்றுமில்லையடி, வாரிணி! நாலு மாதமாக அந்தப் பெண் ஒரு மாதிரி கிறுக்குப் பிடித்தவள் போல் இருக்கிறாள். அடிக்கடி மயக்கம் போட்டு விழுந்து தொலைக்கிறாள். தாய் தகப்பனார் இல்லாத பெண்ணை நம்மை நம்பி ஒப்புவித்திருக்கிறார்களே என்று இளைய பிராட்டிக்குக் கவலை. அதனால்தான், வானதிக்கு என்ன வந்துவிட்டது என்று கேட்கச் சோதிடரிடம் அழைத்துப் போயிருக்கிறார்! ஏதாவது பேய் பிசாசுகளின் சேஷ்டையாயிருக்கலாம் அல்லவா? அப்படியிருந்தால் ஏதாவது மந்திரம் கிந்திரம் போட்டு ஓட்ட வேண்டும் அல்லவா?" என்றாள் தாரகை.

**அமரர் கல்கி**

"பேயுமில்லை, பிசாசுமில்லையடி! இவளை வந்து எந்தப் பிசாசு பிடிக்கப் போகிறது? இவளே நூறு பிசாசை அடித்து ஓட்டி விடுவாளே?" என்றாள் வாரிணி.

"வானதி மயக்கம் போட்டு விழுவது கூடப் பாசாங்குதானடி! இப்படியெல்லாம் செய்தால் மெதுவாக இளவரசரைத் தன் வலையில் போட்டுக் கொண்டு விடலாம் என்று அவளுடைய எண்ணம்!" என்றாள் இன்னொருத்தி.

"நிரவதி சொல்லுவதுதான் சரி! அது மட்டுமா! அன்றைக்கு இளவரசர் புறப் படும்போது கையிலிருந்த தீபத் தட்டைக் கீழே போட்டாளே? அதுகூடத் தன்னை அவர் கவனிக்க வேண்டுமென்பதற்காகச் செய்த காரியந்தான்! இரண்டு கையாலும் ஏந்திக் கொண்டிருந்த தட்டு அப்படித் தவறி விழுந்து விடுமா? அல்லது நம் இளவரசர் என்ன புலியா, கரடியா, அவ ரைப் பார்த்து இவள் பயப்படுவதற்கு?" என்றாள் வாரிணி.

"உடனே மூர்ச்சை போட்டு விழுந்து விட்டதாகப் பாசாங்கு செய்தாளே? அதற்கு எவ்வளவு கெட்டிக்காரத்தனம் வேண்டும்?" என்றாள் நிரவதி.

"அவள் செய்த ஜாலத்தைக் காட்டி லும் அந்த ஜாலத்தில் குந்தவை தேவியும் இளவரசரும் ஏமாந்து போனார்களே, அதுதான் பெரிய வேடிக்கை!" என்றாள் செந்திரு என்பவள்.

"பொய்யும் புனைசுருட்டும் ஜாலமும் மாய்மாலமும் செய்கிறவர்களுக்குத்தான் இது காலம்!" என்றாள் மந்தாகினி என் பவள்.

"யுத்தத்துக்குப் புறப்பட்டான பிறகு இளவரசர், திரும்பி வந்து இந்த வானதி யைப் பார்த்துவிட்டுப் போனாரே, இதைவிட என்னடி வேண்டும்? அவளு டைய மாயாஜாலம் எவ்வளவு தூரம் பலித்து விட்டது பார்த்தாயா?" என்றாள் வாரிணி.

"அதெல்லாம் ஒன்றுமில்லை; இள வரசர் அவ்வளவு மேன்மையான குண முள்ளவர். ஒரு பெண் மயக்கம் போட்டு விழுந்து விட்டாள் என்றால், அவளைப் பார்த்து விசாரியாமல் போவாராடி? அதி லிருந்து நீ ஒன்றும் அர்த்தம் கற்பிக்க வேண்டாம்!" என்றாள் தாரகை.

"இளவரசரைப் பற்றி நீ சொல்வது உண்மைதான். அவரைப் போன்ற குண சாலி இந்த ஈரேழு பதினாலு உலகத்திலும் வேறு யார் இருக்க முடியும்? கதைகளிலும் காவியங்களிலும் கூடக் கிடையாது. ஆனால் நான் சொல்கிறது வேறு. இவள் – இந்த வானதி – மயக்கம் போட்டு விழுந் தாளே, அது என்ன மயக்கம் தெரியுமா? அதைக் கேட்கச் சோதிடரிடமே போயி ருக்க வேண்டியதில்லை. என்னைக் கேட்டிருந்தால் நானே சொல்லியிருப் பேன்!" என்றாள் வாரிணி.

"அது என்ன மயக்கமடி? எங்களுக் குந்தான் சொல்லேன்!" என்றாள் செந்திரு. வாரிணி செந்திருவின் காதோடு ஏதோ சொன்னாள்.

"என்னடி இரகசியம் சொன்னாள்? எங்களுக்குத் தெரியக் கூடாதா?" என்று நிரவதி கேட்டாள்.

"அது சாதாரண மயக்கமில்லையாம்! மையல் மயக்கமாம்!" என்றாள் செந்திரு.

உடனே எல்லோரும் கலகலவென்று சிரித்தார்கள். அதைக் கேட்டு விட்டு நதிக் கரை மரங்களில் இருந்த பறவைகள் சடசடவென்று இறக்கையை அடித்துக் கொண்டு பறந்து சென்றன.

"நம் இளவரசர் இலங்கையிலிருந்து திரும்பி வந்தால் மறுபடியும் இவள் மாயப்பொடி போடப் பார்ப்பாள். அதற்கு நாம் இடங்கொடுத்துவிடாமல் ஜாக்கிரதையாயிருக்க வேண்டும்!" என்று சொன்னாள் நிரவதி.

"இளவரசர் திரும்பி வருவதற்குள் இந்த வானதி பைத்தியம் பிடித்துப் பிதற்ற ஆரம்பிக்காவிட்டால் என் பெயர் தாரகை இல்லை; பெயரைத் தாடகை என்று மாற்றி வைத்துக் கொள்ளுகிறேன்!" என்றாள் தாரகை.

"அது கிடக்கட்டுமடி! இளைய பிராட்டி சொல்லிவிட்டுப் போன காரி யத்தை அவர் வருவதற்குள் செய்து வைக்க வேண்டாமா? வாங்களடி" என் றாள் மந்தாகினி.

பிறகு அப்பெண்களில் இருவர் படகின் அடியில் ஏற்கெனவே சிறிது பெயர்ந்திருந்த ஒரு பலகை

ஆபத்து. திடுமென்று தோன்றி கோழிக் குஞ்சாக அமுக்கி விடுவார்கள்!

"குப்தா! என்னுடன் வா. உன் சந்தேகம் தெளியும்."

"எங்கே ஜீவா?"

"ரிசப்ஷனுக்கு! வெளிச்சத்தில் நம்மைக் காண்பித்துக் கொள்வோம்! வேவு பார்க்கும் 'கழுகு' ஜீவன்கள் கண்ணில் படுகிறதா, பார்ப்போம்..."

ரிசப்ஷன், சோபாவில் இருவரும். குப்தா அசுவாரசியமாக ஒரு தினசரியில்; வீணான வேலை என்று நினைத்திருப்பான் போலும். ஐந்தாம் நிமிடம், அந்த முறுக்கு மீசை பெல் பாய் உடுப்பில் ஜீவா கண்ணில் பட்டான்! எட்ட இருந்தாலும், இந்த முறை சற்றும் சந்தேகமில்லை.

"அதோ!" என்றான்.

என்ன ஒரு துரதிர்ஷ்டம்... குப்தா பேப்பரிலிருந்து நிமிர்ந்த போது –

முறுக்கு மீசை இவர்களுக்கு முதுகு காண்பித்தபடி; அவசரமாகப் பின்கட்டு நோக்கி... எங்கே செல்கிறான்..?

"இரு. வந்து விடுகிறேன்!" என்று ஜீவா கிளம்பினான். வேகமாகச் சென்றான். தடுப்புக் கதவு தாண்டினான். கம்மென்ற மசாலா வாசம். கலவையாக ஏதேதோ ஒலிகள். பக்கவாட்டில் மெகா கிட்சன். அடுத்து ஒரு சலவையகம் வந்தது. வெயிட்டர்கள், ஹவுஸ் கீப்பர்கள்... எவரெவரோ தென்பட்டார்கள்.

மு. மீசை தேர்ந்தவன் என்பதில் சந்தேகமில்லை. அவனிடம் வழுக்கும் விரைவு; காலில் ரோலர் ஸ்கேட்டிங் சக்கரம் போல! செல்லட்டும். இன்று அவன் எங்கே சென்றாலும் விடப் போவதில்லை. அடுத்துப் பிரவேசித்தது –

அகலம் குறைவாக இருந்தது. காரிடார் அல்லது நடைபாதை போல. வெளிச்சத்திற்குச் சில ட்யூப் லைட்டுகள் மட்டுமே. நீளமாகச் சென்றது. தொலைவில் வளைந்தது. அதற்குப் பிறகு? எங்கே இட்டுச் செல்கிறான்?

சட்டென்று விளக்குகள் அணைந்தன! ஏதோ சதி. எவரோ நிறுத்தியிருக்கிறார்கள். ஜீவா நின்று விட்டான். மிகவும் இருட்டாக இருந்தது. பின்னால், எவரோ மெல்ல நடந்து வரும் ஒலி கேட்டது. ஜீவா காத்திருந்தான்.

அந்த உருவம் நெருங்கி விட்டது புரிந்தது. ஜீவாவுக்குத் தீட்டப்பட்ட நுண்மையான காதுகள். தயாராக இருந்தான். இருள் இருவருக்கும் பொதுதானே...

திடுமென்று காற்றில் விஸ்ஸென்ற சீறல்!


The following particulars regarding the ownership of 'KALKI' the Tamil Weekly newspaper, are published, as called for by rule 8 of the Registration of Newspapers (Central) Rules 1956.

**FORM IV**

1. Place of Publication : Chennai
2. Periodicity of Publication : Weekly
3. Name of Printer : K. Rajendran
   Nationality : Indian
   Address : 1, 5th Street, Lake Area, Nungambakkam, Chennai - 600 034.
4. Name of Publisher : K. Rajendran
   Nationality : Indian
   Address : 1, 5th Street, Lake Area, Nungambakkam, Chennai - 600 034.
5. Name of Editor : Seetha Ravi
   Nationality : Indian
   Address : 'Mangala Ganesh', Second Floor, 15, IV Seaward Road, Valmiki Nagar, Thiruvanmiyur, Chennai - 600 041.

6. Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one percent of the total capital : **Bharathan Publications Private Limited, 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.**

I hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

1.3.1998 K. Rajendran
Publisher


தாக்க வந்தது கட்டை அல்லது ஏதோ ஒரு கனமான பொருள். ஜீவா தலையை நச் சென்று பதம் பார்த்திருக்கும்....

நுட்பமாகக் கணக்கிட்டுக் காத்திருந்த ஜீவாவிடம் ஒரு மைக்ரோ செகண்டு கூடத் தாமதமில்லை! ஆக்ஷன் என்றால், அவனை மிஞ்ச ஆளில்லை...

சரேலென்று சரிந்திருந்தான். தரையில் கிடந்த வாகில் வலக் காலை உயர்த்தி அந்த உருவத்திற்கு ஒரு வலுவான உதை. பின் விடுபட்ட ஸ்பிரிங் போல் துள்ளி எழுந்து எகிறலுடன் முன் சென்று இரும்பு முஷ்டியால் மூன்று குத்துக்கள்; சரமாரியாக. அந்த மாஜி உளவாளியிடம் அனாவசியப் பதற்றம் இல்லை; மூர்க்கத்தனம் இல்லை; இருளிலும் குழப்பம் இல்லை; எதிராளிக்கு அவகாசமே தராத மின்னல் வேகத்தில்; ஒரு தேர்ந்த சர்ஜன் போல் லாகவமாகத் துல்லியமான தொழில் முறையில்....

உருவம் அலறலுடன் ஓட்டமெடுத்தது. அடுத்த நிமிட முடிவில், மின்சாரம் வந்தது. கீழே அந்தக் கட்டை கிடந்தது. இவனும் தன் தலையில் போட்டு மயக்கப்படுத்தவே – முறுக்கு மீசை தப்பிக்க உதவவே வந்திருக்கிறான். மிகப் பெரிய ஹோட்டல் இது.



''சமயத்துல யாரையாவது அடிச்சிடுறேன் டாக்டர்.''

**''ஏன் அடிக்கிறீங்க?''**

**''இப்படித்தான் கிராஸ் கேள்வி கேட்டுட்டா போதும் அடிக்கத் தோணிடுது...!''**

**— ஜி. செல்லத்துரை**

கிடைத்த அவகாசத்தில், மு. மீசை எங்கேனும் சென்று பதுங்கியிருப்பான்...

வேவு பார்க்கும் ஒரு முறுக்கு மீசைக்கு அடைக்கலம். வேண்டும் போது கரண்ட் ஆஃப் செய்து உதவுகிறார்கள். வேறொருவன் கட்டையைத் தூக்கி வந்து தாக்க முடிகிறது. இந்த ஹோட்டலில் என்ன குண்டர்கள் ராச்சியமா...

குப்தாவிடம் வந்து கட்டை விரல் தாழ்த்தி 'தோல்வி' என்று உணர்த்தினான்.

"அவன் முறுக்கு மீசையோ... எவனோ... எனக்கு உறுதியாகவில்லை! இருந்தாலும் எதற்கு ரிஸ்க்? சுமுக்கமாகக் காலி செய்து கொண்டு கிளம்பி விடுவோம்!" என்றான் குப்தா கவலையுடன்.

ஜீவா பதில் சொல்லவில்லை. அவன் கவனம் வாசல் மீதிருந்தது. "இன்னொரு விருந்தாளி!" என்று முணுமுணுத்தான். இங்கே என்ன நடக்கிறது? ஏதோ நடக்கப் போகிறது... அதற்குள்...

"என்ன சொல்கிறாய்?"

"வாசலில், அந்த சிவப்புத் தொப்பி!"

குப்தாவும் பார்த்தான். கண்ணாடிக் கதவின் வழியே தெரிந்தது. வெளியே சாலையைப் பார்த்தபடி உலவும் சிவப்புத் தொப்பிக்காரன்...

"இப்போது நம்புகிறாயா? உள்ளே உளவு பார்க்க மீசை! வெளியே காவல் காக்க தொப்பி!"

"உண்மைதான். இந்த ஹோட்டலுக்கு நாம் வந்திருக்கக் கூடாது! வா ஜீவா. நைஸாக நழுவி விடுவோம்!" என்றான் பரபரப்புடன்.

சட்டென்று ஜீவா ஒரு முடிவுக்கு வந்தான். குப்தாவின் மெட்டுக்கு ஆடியது போதும். ஏதும் புரியாத துரத்தல் நாடகம் அலுத்து விட்டது. இனி என் வழியில்தான்...

"குப்தா! நாம் எங்கும் செல்லப் போவதில்லை!"

"பின்னே?"

"இப்போது அந்த தொப்பியைப் பிடித்து விசாரிக்கப் போகிறேன்!"

"வேண்டாம்! இப்போது மோதக் கூடாது! ஆபரேஷனைக் கெடுத்து விடாதே! ஓசைப் படாமல் கிளம்பலாம் வா!" என்றான் பதை பதைப்புடன்.

"சாரி குப்தா. 'கண்ணாமூச்சி' போதும்! இந்தக் கழுகுகளைத் தவிர்க்கவே முடியாது என்பது தெளிவு. எப்படியோ எங்கிருந்தோ முளைத்து விடுகிறார்கள்!"

"குப்தா... உனக்கு ஜீவாவைச் சரியாகத் தெரியவில்லையே!" என்றான் கண்கள் மின்ன.

கத்தி எடுத்தான். டீப்பாயிலிருந்த நியூஸ் பேப்பரில் கத்தியால் குத்திக் கிழித்தான். பிசிறுகளைப் பிய்த்து விசிறினான். இப்போது அந்தத் தினசரியில் மத்தியப் பகுதிக்குக் கொஞ்சம் மேலே இரண்டு சிறு துவாரங்கள்!

குப்தா வாய் பிளந்து பார்த்தபடி இருந்தான். ஜீவா திரும்பிப் பாராமல் காஷுவலாக நடந்தான்; வாசல் நோக்கி.

தன் முகத்தை மறைக்கும் அளவு அந்தச் செய்தித்தாளை உயர்த்திப் பிடித்திருந்தான். அதிலிருந்த சிறிய ஓட்டைகள் வழியே சகலமும் தெளிவாகத் தெரிந்தது. தற்போது ஒரு அலங்காரத் தூண் மீது சாய்ந்திருந்தான் சிவப்புத் தொப்பி; பார்க்கிங் கார்களையும், சாலையையும் பராக்குப் பார்த்தபடி.

ஆஹா... வசமாக மாட்டிக் கொண்டான்! முதல் முறையாகப் பிடிபடும் முதல் கழுகு...! நிச்சயம் தன்னை எதிர்பார்த்திருக்க மாட்டான். வாயிலோன் கண்ணாடிக் கதவு திறந்து விட –

ஓசையின்றி முன்னேறியிருந்தான். சிவப்புத் தொப்பியின் முதுகை எட்டி விட சில அடிகளே... நியூஸ் பேப்பரைத் தாழ்த்தினான்.

''ஹலோ!'' என்று மென்மையாக அழைத்தவாறே தன் வலக் கரத்தால் கப்பென்று அவன் வலது புஜத்தை இறுகப் பற்றினான் ஜீவா! தொப்பி ஆசாமி திக்கென்று விழித்தான்.

இப்போது ஜீவாவின் இடக் கரத்தை அந்த நியூஸ் பேப்பர் மடிப்பு மறைத்திருந்தது.

இடக் கையிலிருந்த துப்பாக்கி சிவப்புத் தொப்பி முதுகில் பதிந்திருந்தது...!

(தொடரும்)



• பந்தாடத் தயார்!



• காமெடி!

# ரஜினி துணிச்சல்காரரா? பயந்தாங்கொள்ளியா?

● எம். அசோக்ராஜா, திருச்சி – 15.

*? மக்கள் நலனில் அக்கறை செலுத்தாத அரசியல்வாதிகளைப் பந்தாடும் தைரியம் வந்து விட்டது என்கிறாரே விஜயசாந்தி...?*

! சினிமா போல அரசியலில் டிஷ்யூம் டிஷ்யூமெல்லாம் பண்ண முடியாது என்பதை அனுபவம் அவருக்கு உணர்த்தும்.

● வி. பரமசிவம், மதுரை.

*? 'காங்கிரஸ் வாழ்ந்தால் நாடு வாழும்; காங்கிரஸ் வீழ்ந்தால் நாடு வீழும்' என்று தங்கபாலு கூறியிருப்பது பற்றி...?*

! அதான் இரண்டுமே விழுந்து நொண்டிக்கிட்டிருக்கே! ஆனால், நாடு என்னவோ நாளாவட்டத்தில் நிமிர்ந்து விடும்.... காங்கிரஸ் நிமிருமா என்பதைத் தேர்தல் முடிவு சொல்லும்!

● லவ்லி பாலகிருஷ்ணன், மதுரை – 9.

*? ரயில் பயணிகள் தங்கும் அறைக் கட்டணம் திடீரென இரண்டு மடங்கு உயர்த்தப் பட்டது பற்றி...?*

! அதை ஏன் கேட்கறீங்க; இந்த ஒரு உயர்வு மட்டும்தானா? பயண டிக்கெட், சரக்குக் கட்டணம் உயரவில்லையா...? நகராட்சிகளின் வீட்டு வரி ஏறவில்லையா? தண்ணீர் வரி, தண்ணீர்க் கட்டணம் எல்லாம் ராக்கெட் வேகத்தில் விண்ணைத் தொடவில்லையா? தொழி



• டீவி. கலக்கல்!

லகங்களுக்குப் போடப்படுகிற ஒவ்வொரு வரியும் அதிகமாகிக் கொண்டே போகவில்லையா...? ஹூம்! எதை விட்டு வைச்சாங்க?

● கொடை த. காமராசு,
கொடைக்கானல். ❑

*? சாதி சமயமற்ற கட்சி எனச் சொல்லிக் கொண்டிருப்பவை கூட சாதி அடிப்படையிலேயே வேட்பாளரைத் தேர்ந்தெடுப்பது ஏன்...?*

! அதுதான் அரசியல் – சொல்வது ஒன்று; செய்வது வேறு... மக்களை, சிந்திக்கவல்ல கல்வியாளர்களாக உயர்த்தத் தவறிய அரசும் தலைவர்களும் இப்படி உணர்வுத் தூண்டல் மூலமே வோட்டுப் பெற வேண்டிய சாபத்துக்கு உள்ளாகியிருப்பதில் ஆச்சர்யம் என்ன?

● எஸ். ராமசுப்பிரமணியன், தூத்துக்குடி.

*? ரஜினி துணிச்சல்காரரா? பயந்தாங்கொள்ளியா?.... அரசியலில் இறங்க அவர் தயங்குவதேன்...?*

! அவர் பயந்தாங்கொள்ளி அல்ல; துணிச்சல்காரர்தான் என்பதைத் தேர்தலுக்கு முதல் நாள் டீவி பேட்டி உணர்த்தி விட்டது. (அதில் சில அம்சங்களில் நமக்குக் கருத்து மாறுபாடு இருக்கலாம் என்பது வேறு விஷயம்.) அரசியலில் அவர் இறங்கத் தயங்குவதும் தயங்காததும் தனி. அந்தத் துறையில் அவருக்கு ஈடுபாடு இருந்தால், இன்றில்லாவிட்டாலும் நாளை வருவார். மகிழ்ச்சி தரும் ஈடுபாடு இல்லாதபோது எந்தத் துறையிலும் வெற்றி பெற முடியாது.

● அவ்வை கே. சஞ்சீவி பாரதி, கலிங்கியம்.

*? காமராஜரின் உண்மையான வாரிசு வாழப்பாய்தான் என்கிறாரே நடிகர் எஸ். எஸ். சந்திரன்?*

! காமெடி நடிகர் ஆச்சே, அப்படித்தான் பேசுவார்!

● மஞ்சுதேவன், மும்பை – 86.

*? ஒரு நாளைக்கு 24 மணி நேரத்துக்குப் பதிலாக 48 மணி நேரம் இருந்தால்...?*

! ஐயய்யோ! இன்னும் இரண்டு வேளை சாப்பாடு, ஒரு வேளை டிஃபன், காப்பி கட்டிவராது சாமி!

● எஸ். சுவாமிநாதன், மன்னார்குடி – 1.

*? 'ஜெயலலிதாவை வரவேற்றுப் பேசுவதை*

விட கோவிலில் மணி அடிக்கும் வேலைக்கு நெடுஞ்செழியன் செல்லலாம்' என்று அன்பழகன் கூறியிருப்பது பற்றி...?

! கோயிலில் மணி அடிக்கும் தெய்வீகப் பணியை இப்படிக் கேவலப்படுத்தியதற்காக பேராசிரியர் கண்டனத்துக்கு உள்ளாகிறார்.

● வி. மோகன், நெல்லிக்குப்பம்.

? தி.மு.க. தனது தேர்தல் பிரசார பத்திரிகை விளம்பரங்களில், பாபர் மசூதி இடிப்பதைப் போன்ற படம் போட்டு விளம்பரம் கொடுத்திருப்பது, ஏற்கெனவே புகைந்து கொண்டிருக்கும் மத உணர்வை ஊதி விடுவதாகாதா...?

! 'இடிக்கிற' படத்தைப் போலவே, ராமர் கோயில் கட்டுவோம் என்ற பி.ஜே.பியின் கூளுரையும் மதத்துவேஷங்களைத்தான் தூண்டுகிறது!

● கரி. அருணாசலம், ஈரோடு – 1.

? 'ரிஸ்க்' இல்லாத தொழில் எது...?

! தராசுக்குக் கேள்வி அனுப்புவது!

● ஜி. ஜி. கிருஷ்ணன், விசலூர்.

? நடிகர்களை கௌரவிக்கும் அளவுக்கு 'கல்கி' எழுத்தாளர்களைக் கௌரவிப்பதில்லை என பாலகுமாரன் குற்றம்சாட்டியிருக்கிறாரே...?

! பாலகுமாரன் நினைப்பது போல் கல்கி என்றைக்குமே வேஷம் போட்டதில்லை – 1941-ல் ஆரம்பித்த காலம் தொட்டே சினிமாவுக்கு முக்கியத்துவம் தந்து வந்திருக்கிறது. சினிமாவும் சின்னத் திரையும் இன்று நமது வாழ்க்கையில் முக்கிய அம்சங்களாக இருக்கும் போது அவற்றுக்குப் பத்திரிகையிலும் இடம் தரத்தான் வேண்டும். அதை எப்படிச் செய்கிறோம் என்பதில் தான் கல்கிக்கும் மற்ற இதழ்களுக்கும் இடையே உள்ள வித்தியாசம். அதை வாசகர்கள் அறிவார்கள். கல்கி, நடிகர்களைக் கௌரவிக்கும் அளவுக்கு எழுத்தாளர்களைக் கௌரவித்ததில்லை என்கிற குற்றச்சாட்டு அபாண்டமானது. இதனை, சினிமாவை ஒதுக்காமல் அதனால் நிறையப் பயனடைந்து விட்டுப் பிறரைப் பழிக்கும் பாலகுமாரனே நன்கு அறிவார்.

● என். சுவாமிநாதன், வலங்கைமான்.

? ஒரு நாட்டின் முன்னேற்றத்தில் பத்திரிகையின் பங்கு என்னவென்று கருதுகிறீர்கள்?

! உண்மைகளை மட்டுமே எடுத்துரைப்பதோடு சிந்திக்க வைப்பதிலும் தெளிவு பெற உதவுவதிலும் பத்திரிகைகளுக்குப் பெரிய பங்கு உண்டு. அதில்தான் அவை இன்று தவறிக் கொண்டும் இருக்கின்றன.

● ஜே. பாபு, குடந்தை – 1.

? எம். எஸ். உதயமூர்த்தி தமது கட்டுரையில், 1950 களில், கல்கி அமரரானார் எனக் குறிப்பிட்டுள்ளார். ஆனால், பொன்னியின் செல்வன் கதையோ முதல் முறை கல்கியில் 1950இல் தான் பிரசுரமானது. கல்கி இயற்கை எய்திய ஆண்டு எது...?

! டிசம்பர் 5, 1954.

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி.

? 'தொழிற்சங்கத் தலைவர்கள் வேலை செய்யாவிடில் சம்பளம் கிடையாது' என்று சென்னை உயர்நீதி மன்றம் தீர்ப்பு வழங்கியுள்ளது பற்றி...?

! அலுவலக நேரத்தில் தொழிற்சங்கப் பணிக்குச் சென்றால் ஊதியம் கிடைக்காது என்பது நியாயமான தீர்ப்புத்தான். இது நேர விரயத்தைத் தவிர்ப்பதுடன் தொழிற்சங்கப் பணிகளுக்குத் தனி அந்தஸ்தும் கொடுக்கும்.

● எம். காமராஜ், சென்னை – 1.

? நம் நாட்டில் மட்டும் ஆண், பெண் இருவருக்கும் தொப்பை விழுகிறதே? இதுபோல் வெளிநாட்டில் உள்ளவர்களுக்கு விழுவதில்லையே...? ஏன்...?

! வெளிநாட்டாருக்குத் தொப்பையே கிடையாது என்பது மாயை! ஆனால் பெரும்பாலான மேற்கத்திய நாடுகளில் உடற்பயிற்சிக்கும் உடற்கட்டுக்கோப்புக்கும் நிறைய முக்கியத்துவம் தரப்படுகிறது. உணவு இடைவேளையில் உடற்பயிற்சி செய்ய அலுவலகங்களில் கூட 'ஜிம்' இருக்கிறது.

• கண்டனம்!



• ஆரண்ய குமாரன்!



• 'வாழ்வு' தத்துவம்!



❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
கொடை த. காமராசு,
விஜயலட்சுமி மளிகை,
நாயுடுபுரம்,
கொடைக்கானல் - 624 101.

டாக்டரே தேவையில்லை! யாராவது சோகையாகக் காணப்பட்டாலோ, "அடிக்கடி டயர்டா இருக்கு" என்று சொன்னாலோ, நம்மில் பலரே கூட "உனக்கு அனீமியாவாக இருக்கும். எதுக்கும் டாக்டர்கிட்டே போய் ரத்தப் பரிசோதனை செய்துக்கோ" என்று சொல்லக்கூடும்.

உடலில் இரும்புச் சத்து போதிய அளவு இல்லையென்றால் 'அனீமியா' என்பது பரவலாக அளிக்கப்படும் விளக்கம். என்றாலும் அனீமியாவைப் பொறுத்தவரை தெரிந்து கொள்ள வேண்டிய விஷயங்கள் பல உண்டு.

நம் நுரையீரல், நாம் சுவாசிக்கும் காற்றிலிருந்து ஆக்ஸிஜனை தனியாகப் பிரித்தெடுக்கிறது. ரத்தத்தில் உள்ள சிவப்பணுக்களின் முக்கிய வேலை இந்த ஆக்ஸிஜனை அப்படியே கடத்திக் கொண்டு போய் உடலின் எல்லாத் திசுக்களுக்கும் சேர்ப்பதுதான். இந்த ஆக்ஸிஜனோடு நாம் உட்கொள்ளும் உணவுச் சத்துக்களும் சேரும் போது உடலுக்குச் சக்தி கிடைக்கிறது.

அனீமியா ஏற்பட்டால், ரத்தத்தால் போதிய அளவு ஆக்ஸிஜனை திசுக்களுக்கு அளிக்க முடிவதில்லை. இதனால்தான் அனீமியாக்காரர் பலவீனமாகவும் களைப்பாகவும் உணர்கிறார். அனீமியா மிக அதிகமாகும்போது, தலைவலி, தலைசுற்றல், தோல் வெளிறிப் போதல், அதிகரிக்கும் இதயத்துடிப்பு, மூச்சு வாங்குதல் இவையெல்லாம் உண்டாகும்.

நம் உடலில் சுமார் எவ்வளவு சிவப்பணுக்கள் இருப்பதாக நினைக்கிறீர்கள்? உண்மையை அறிந்தால் அனீமியாவால் பாதிக்கப்படாமலேயே கூட கொஞ்சம் மயக்கம் வரலாம்!

ஒரு சொட்டு ரத்தத்தில் சுமார் முப்பது கோடி சிவப்பணுக்கள் உண்டு! நம் ஒருவரின் உடலில் உள்ள சிவப்பணுக்கள் அத்தனையையும் ஒரே நீளவாக்கில் வைத்தால் அந்தச் சங்கிலி உலகத்தையே சுற்றி வரும் அளவுக்கு நீளமாக இருக்கும் என்று (வேலை மெனக்கெட்டு) கண்டுபிடித்திருக்கிறார் ஒரு விஞ்ஞானி! இதோ இன்னொரு அசத்தும் தகவல் : சிவப்பணுக்களுக்குப் பரப்பளவும் ரொம்ப அதிகம். ஒருவர் உடலில் உள்ள சிவப்பணுக்களை மட்டும் கொண்டு ஒரு கம்பளம் நெய்தால், அந்த கம்பளத்தின் மொத்த பரப்பளவு சுமார் நாலாயிரம் சதுர மீட்டர் இருக்கும்!

மொத்தத்தில் சிவப்பணுக்களின் எண்ணிக்கை எக்கச்சக்கம் என்பதால் ஏதோ கொஞ்சம் சிவப்பணுக்கள் குறைந்து விட்டால் ஒன்றும் குடிமுழுகி விடாது. சொல்லப் போனால் தினமுமே 0.8 சதவிகிதம் சிவப்பணுக்கள் நம் உடலில் அழிந்து கொண்டுதான் இருக்கின்றன. இந்த இழப்பை ஈடுசெய்கிற அளவுக்கு நம் உடலில் புதிதாக சிவப்பணுக்கள் தோன்றிக் கொண்டே இருக்கின்றன. அப்படித் தோன்றுவதில் ஏதாவது பாதிப்பு ஏற்பட்டால் அப்போதுதான் அவஸ்தை; அனீமியா!

# உலகைச் சுற்றக்கூடிய

இந்த சிவப்பணுக்கள் எங்கிருந்து உருவாகின்றன? எலும்பின் நடுப்பகுதியில உள்ள மஜ்ஜையிலிருந்துதான். இப்படி எலும்பு மஜ்ஜையிலிருந்து சிவப்பணுக்கள் தொடர்ந்து உருவாக வேண்டுமென்றால் அதற்குச் சில மினரல்களும், வைட்டமின்களும் தேவைப்படும். நம் உணவில் இந்தச் சத்துக்கள் போதிய அளவு இல்லாது போனால்

## அட, இதுல இவ்ளோ விஷயம் இருக்கா? — 4

சிவப்பணுக்கள் உற்பத்தி குறைய.... அனீமியா!

சில சமயம் அதிக ரத்தம் வெளியேறுவதாலும் கூட அனீமியா ஏற்படலாம். வெளிக் காயம் மட்டுமல்ல; வயிற்று அல்சரில் ரத்தம் வெளியேறுவதாலும் அனீமியா உண்டாகலாம். ரத்தம் வெளியேறினால் அதை ஈடுகட்ட உடல் அதிக நீர்ச்சத்தைத் தேக்கி வைத்துக் கொள்கிறது. நீர்ச்சத்து அதிகமாகும் போது ரத்தத்தில் உள்ள சிவப்பணுக்களின் சதவீதப் (எண்ணிக்கை மட்டுமல்ல) குறைந்து விடுகிறது.

வேறு ஒரு விதத்திலும் அனீமியா உண்டாகலாம். "ஹிமோலிஸில்" என்ற செயல் முறை மூலமாகத்தான் கல்லீரலில்,



# சிவப்பணுச் சங்கிலி!

பயன் குறைந்து போன பழைய சிவப்பணுக்கள் அழிக்கப்படுகின்றன. இந்தச் செயல்முறை வெகு வேகமாக நடைபெற்றால் தொடர்வது அனீமியா. இது பரம்பரையாகவும் தோன்றக்கூடிய ஒரு குறைபாடு.

இரும்புச் சத்து, வைட்டமின் B 12, ஃபோலிக் அமிலம் ஆகிய சத்துக்கள் உணவில் ஓரளவாவது இருப்பதும் அவசியம். சில சமயம் நம் உணவில் இந்தச் சத்துக்கள் இருந்தாலும் கூட, அவற்றை நம் எலும்புத் திசுக்களால் உறிஞ்சிக் கொள்ள முடியாமல் போகலாம். இப்படி எலும்புத் திசுக்கள், சிவப்பணுக்களை உருவாக்கும் சக்தியை முற்றிலும் இழந்துவிடும் கட்டத்தைத்தான் லூகேமியா - ரத்தப் புற்றுநோய் என்கிறார்கள்.

ரத்தத்தில் உள்ள சிவப்பணுக்களை மொத்த ரத்த அளவில் இவ்வளவு மில்லி கிராம் சதவீதம் என்று கணக்கிடுவார்கள். வளர்ச்சியடைந்த ஒரு ஆணுக்கு இது 15 - 16 என்று இருக்கும். பெண்களுக்கு 12. சிறுவர்களுக்கு 11. ஆனால் ஒன்று... குழந்தை பிறந்து ஒரு மாதத்துக்கு இந்த அளவு 17 -18 வரை அதிகமாக இருக்கும். அந்த நிலையில் 15 என்கிற அளவுக்குக் குறைந்தால் கூட நல்லதல்ல... ஒரு பெண்மணி கர்ப்பமாக இருக்கும் போது அவள் உடலில் நிறைய நீர்ச்சத்து இருக்கும். அந்த நிலையில் மேற்கூறிய சிவப்பணுவின் அளவீடு 10.5 என்று இருந்தால் கூட அது நார்மல்தான்!

சராசரியாக, சிவப்பணு எண்ணிக்கை 4 என்பதற்கும் குறைந்து விட்டால் அது சீரியஸான அனீமியா. உடனடியாக அவர் உடலில் அடர்த்தியான சிவப்பணுக்கள் (Packed Red Cell) செலுத்தப்பட வேண்டும்.

— ஜி.எஸ்.எஸ்.

# போஸ்டர்

"வாழ்க்கையில் துக்கம் வரவேண்டுமா? ஆர்.கே.ஜுவல்லரியில் இன்றே நகை வாங்குங்கள்."

பெரியகடை வீதிதான் அந்த ஊரின் இதயமே. அந்த வீதி எங்கும், ஒரு சுவர் விடாமல் இந்த விளம்பரம் ஒட்டப் பட்டிருந்தது.

ஆர்.கே. ஜுவல்லர்ஸ்! பத்து வருடம் முன்பு ஆரம்பிக்கப்பட்டு, ஓரளவு வளர்ந்த நகைக் கடை.

அதன் முதலாளி சரவணன் கொதித்துப் போய் அமர்ந்திருந்தார்.

டெலிபோன் மணி அடித்தது.

வெறுப்பாய் அதை எடுத்தார் சரவணன்.

"ம்ம்! ஆமாம். சரி."

போனை வைத்தார். துக்கம் கேட்கும் சாக்கில் தங்கள் மகிழ்ச்சியை வெளிப்படுத்தும் மற்ற நகைக்கடையாளர்கள்.

ப்ச்! பத்து வருடமாய்ச் செய்யும் பிசினஸில் இதுவரை எந்தச் சறுக்கலுமில்லை.

டேபிளை ஓங்கிக் குத்தியதில் அவர் மன உளைச்சல் தெரிந்தது.

நகை வியாபாரமே 'சென்டிமென்ட்ஸ்' நிரம்பியது. கைராசியை நம்புபவர்கள்தான் வியாபாரம் செய்ய வருவார்கள்.

கஸ்டமர்கள் மனத்தில் கொஞ்சம் சிணுங்கல் ஏற்பட்டாலும் போதும், கை நழுவிய கண்ணாடிப் பாத்திரமாகிவிடும் அத்தனை வருட உழைப்பும்.

யார் அவன்? முகம் தெரியாத அந்த எதிரி யார்?

தன் வியாபாரம் கொழிப்பது கண்டு அசூயைப்படும் சக வியாபாரியா?

நிச்சயம் இந்த விளம்பரத்தின் மூலம் பாதிப்பு உண்டு.

தெருவின் ஒரு இடம் மிச்சமில்லாமல் இரவோடு இரவாக ஒட்டிவிட்டுப் போயிருக்கிறான் எதிரி.

"உங்க பொண்ணு கல்யாணத்துக்கு எங்க கடை நகையைப் போடுங்க. பத்தாவது மாசம் பேரன் உங்க மடியை நனைப்பான். அதுக்கு நான் கியாரண்டி."

எல்லாம் போய்விட்டது!

துக்கம்! அழுத்தமான வார்த்தை! படிப்பவர் மனத்தில் கூர் ஈட்டியாய் பதியும் தமிழ்ச் சொல்!

அவனை விடக் கூடாது! கண்டுபிடித்து, மூஞ்சியில் அறைய வேண்டும்!

போனை எடுத்து நம்பரைச் சுழற்றினார்.

'சங்கர் டிடெக்டிவ் ஏஜன்சி'.

பத்துக்கு, பத்து அறைக்குள் மூவர் அமர்ந்திருந்தனர்.

சுவரில் ஒரு பக்கம் இந்தியா மேப். மற்றொருபுறம் தமிழக மேப். மூன்றாவது பக்கம் அந்த ஊரின் மேப். நாலாவது பக்கம்... கதவு!

பாஸ் அரிச்சந்திரன் 'பான்பராக்'மென்று கொண்டிருந்தார். அவர் எதிரே அசிஸ்டெண்ஸ் டிடெக்டிவ் ஹரி மற்றும் சரவணன். ஆம், ஆர்.கே. ஜுவல்லரி முதலாளிதான்.

டேபிள் மேல், சுவரிலிருந்து ஓரளவு முழுதாய்க் கிழித்து எடுக்கப்பட்ட அந்த விளம்பரம்.

"உடனே, உடனே கண்டுபிடிங்க சார். அந்த ராஸ்கலை என் கையாலேயே..."

கொதிப்பாய்ப் பேசினார் சரவணன்.

தொழிலுக்கே உரிய நிதானத்துடன் அரிச்சந்திரன் புன்னகைத்தார்.

"இன்னிக்கு புதன்கிழமை. அடுத்த புதன் கிழமை ரிசல்ட் தந்துடுவோம்."

ஹரியைப் பார்த்தார். அவனும் ஆமோதித்தான் தலையசைப்பில்.

"இந்த நொடி முதல் இது இனி உங்க பிரச்னை இல்லை சார். எங்க ப்ராப்ளம். வழக்கம் போல நீங்க உங்க பிசினசைப் பாருங்க."

கை குலுக்கி விடைபெற்றார் சரவணன்.

ஹரி தன் இருக்கைக்குத் திரும்பினான். மூளை முழுவதும் யோசனை. மனசு முழுவதும் உற்சாகம். மூளையும், மனசும் நெருங்கி, நெருங்கி வர, 'க்ளிக்'!

கிளம்பினான் 'மிஸ்டர் எக்ஸ்'ஸைத் தேடி.

"உங்க விசாரணையின் நோக்கம் புரியுது ஹரி. சரவணனும், நானும் ஒரே

வியாபாரம்தான். ஆனால் இதுல போட்டி உண்டே தவிர பொறாமை கிடையாது. முதல்ல இந்த பெரிய கடை வீதியிலே இரண்டே இரண்டு நகைக் கடைதான் இருந்தது."

"எப்போ சார்?"

"இருபது வருஷம் முன்னே. ரெண்டு நாலாச்சு. நாலு எட்டாச்சு. இப்ப பதினாறு கடை இருக்கு. அத்தனையிலும் வியாபாரமும் நடக்குது. நகைக்கடை ஆரம்பிச்ச யாரும் நஷ்டப்பட்டுக் கடையை மூடிட்டதாய் கேள்விப்பட்டிருக்கீங்களா?"

ஹரிக்கு அவர் கேள்வி ஆச்சரியத்தை ஏற்படுத்தியது. அவர் சொல்வது முற்றிலும் உண்மை. அம்பலவாணன், அவன் அப்பாவின் நண்பர். இங்கு கடந்த பதினைந்து வருடமாய்க் கடை வைத்திருப்பவர்.

"அட ஆமாம் சார். எப்படி சாத்தியம் அது? நகை வியாபாரத்துல மட்டும் 'கிராஃப்' எப்படி மேலேயே போகுது?"

அம்பலவாணன் கண் சிமிட்டிச் சிரித்தார்.

"அது தொழில் ரகசியம். பிரச்னைக்கு வரேன். இந்த விளம்பரத்தோட வாக்கியங்களைப் பார்த்தால், யாரோ பாதிக்கப்பட்டவனோட குரலாய் மனசுக்குப் படுது!"

"அப்படீன்னா..."

"ஆமாம். ஒரே பிசினஸ் பண்றோம். சொல்லக் கூடாதுதான். ஆர்.கே. ஜுவல்லரி நகைகளின் தரம் கொஞ்சம்... சரி, ஏதாவது காபி, டீ சாப்பிடறீங்களா?"



அடுத்த நாள் ஹரிக்கு சிவராத்திரி ஆனது.

பெரிய கடை வீதியில் இரவு முழுவதும் கண்விழித்து அலைந்தான்.

அதோ, சினிமா போஸ்டர் ஒட்டும் ஆள். முதலிலேயே பணத்தால் அடித்துவிட வேண்டும்.

பசை காயாத கையில் அம்பது ரூபாய் நோட்டு ஏறியது.

"சார், நான் சொன்னேன்னு சொல்லிடாதே. நம்ம இஷ்டன் தான் அதை ஒட்டினது."

"வீடு எங்கே இருக்குது?"

"வீடா? ராவுத்தர் சந்துல தண்ணியடிச்சுட்டு விழுந்து கெடப்பான் பாரு!"

**கிருஷ்ணா**

இஷ்டன் போதை தெளிந்து எழ, காலை ஆறு மணியாகிவிட்டது.

சாக்கடை நாற்றமோ, தெருப் புழுதியோ இல்லாமல், வேறிடத்தில் தான் படுத்திருப்பது தெரிந்ததும் 'சரக்'கென எழுந்தான்.

"நான்தான் உன்னை இங்கே கூட்டிக்கிட்டு வந்தேன்."

ஹரியின் குரல் வாசலிலிருந்து கேட்டது.

"ஆர்.கே.ஜுவல்லரி பற்றி கன்னா, பின்னான்னு எழுதின போஸ்டரை நீதானே ஒட்டினே?"

"அது என்னப்பா ஆர்.கே? நான் படிக்காத ஆளு. வெவரமாச் சொல்லு!"

ஹரி, டேபிளிலிருந்த அந்த கவரொட்டியை எடுத்துக் காட்டினான்.

"அட, இந்த பச்சைக் கலர் போஸ்டரா?"

சட்டென அவன் முகம் பயத்துக்கு மாறியது.

"நீ போலீஸா?"

"இல்லை!"

"அப்பாடி! சொல்லு என்ன வேணும்?"

"யாரு உன்னை ஒட்டச் சொன்னது?"

"அது எதுக்கு உனக்கு?"

ஹரி விஸ்கி பாட்டிலை டேபிள் உள் டிராயரிலிருந்து எடுத்து மேலே வைத்தான்.

"விவரம் சொன்னா முழு பாட்டிலும் உனக்குத்தான்."

கிஷ்டன் கண்களில், கன்றுக்குட்டியைக் கண்ட பசுவின் பாசம்!

"என்ன வேணும்? ராத்திரி பதினோரு மணி இருக்கும். சினிமா போஸ்டர் ஒட்டுவேன் அப்பப்ப. அன்னிக்கு ருக்மணி தியேட்டர் படத்தோட போஸ்டர். எம்.ஜி.யார் சினிமா. குலேபகாவலி."

"அது வேண்டாம். மேலே சொல்லு."

"செவப்பாய், உயரமாய் ஒரு ஆளு வந்தாரு."

"வழுக்கைத்தலையா, முடி இருந்ததா?"

"ம், வழுக்கைதான். அம்பது வயசிருக்கும்."

"ஒல்லியா, குண்டா?"

"ஒல்லிதான். நம்ம வடிவேலு ஜோக்கர் கணக்காய் இருந்தாரு!"

"வேறு ஏதும் வித்தியாசமாய்...?"

"ம்... தெரியலியே. நூறு ரூபாய் கொடுத்து, போஸ்டர் இருக்கற பார்சலையும் என் கையிலே கொடுத்தாரு ஒட்டச் சொல்லி. நாலரை மணி லால்குடி டவுன் பஸ்ஸைப் பிடிக்கணும். அதுக்குள்ளே ஒட்டிடுவியான்னு கேட்டாரு. நான் குடிகாரன்தான். ஆனா, தொழிலு சுத்தம். அரை மணியிலே எல்லாத்தையும் ஒட்டிட்டேன் தெரியுமா? தெரு முழுக்க நடந்து போய் நான் ஒட்டின போஸ்டரைப் பார்த்தாரு, பாவம்."

"எதுக்கு பாவம்?"

"அவரால வெரைசா நடக்கமுடியாதே?"

"ஏன்?"

"ஒரு காலு ஊனம் போலிருக்கு. விந்தி, விந்தி நடந்தாரு."

"அடே பாவி! இதைத் தானேடா முதல்ல சொல்லியிருக்கணும்!"

ஹரி துள்ளிக் குதித்தான். குதித்த குதியில் லால்குடி பஸ்ஸில் போய் விழுந்தான்.

**"சே! சில பேரைத் திருத்தவே முடியாதுப்பா."**

**"யாரைச் சொல்றே?"**

**"மாநாட்டுல, மாறு வேடத்துல வந்து முன் வரிசையில தோழி உட்கார்ந்திருந்தாங்கன்னு சொல்றாங்களே, அவுங்களைத்தான்!"**

**— சீர்காழி வி. ரேவதி**

டவுன் பஸ் அருகில் நின்றபடி, பீடி வலித்துக் கொண்டு, அரசியல் பேசிக் கொண்டிருந்த கண்டக்டரை நெருங்கினான்.

"சார்."

"அடுத்து ரஜினிதான் முதலமைச்சர். என்னா சொல்றே? யாரு வேணும்?"

பீடியை கீழே போட்டு, செருப்பால் தேய்த்தபடி ஹரியின் பக்கம் திரும்பினார் கண்டக்டர்.

"என்ன சார்?"

"லால்குடி பஸ் கண்டக்டர் நீங்கதானே?"

"ஆமாம். இன்னும் அஞ்சு நிமிஷம் இருக்கு புறப்பட. சில்லறை வைச்சுக்கிட்டு ஏறுங்க."

"அதில்லே சார். ஒரு இன்ஃபர்மேஷன் வேணும். நீங்க உதவணும்."

"என்ன?"

"போன வாரம் என் டிகிரி சர்டிபிகேட்டைத் தொலைச்சுட்டேன்."

"அடப்பாவமே! எப்படி?"

"நம் பஸ்சுல போகும்போதுதான். கூட்டமாயிருக்கேன்னு, ஒரு பெரியவர் கையிலே ஃபைலைக் கொடுத்தேன். இறங்கும் போது வாங்க மறந்துட்டேன்."

"என்னங்க இப்படி பொறுப்பில்லாம!"

"தப்புதான். அந்த பெரியவர் சிவப்பா, உயரமாய், ஒல்லியாய், காலைக் கூட விந்தி, விந்தி நடப்பாரே... லால்குடி ரூட்லதான் அவர் ஊரு. யாருன்னு நினைவுக்கு வருதா?"

"அட, நம்ம ஆளுதான். வாளாடியிலே எறங்குவாரே. கால் கொஞ்சம் சரியில்லாததுனாலே, ஒருமுறை இறங்கறப்ப விழுந்து, சண்டை கூட போட்டாரே!"

"எந்த வாளாடி? கீழவாளாடியா?"

"இல்லை. மேல வாளாடி."

"ரொம்ப நன்றிங்க."

வாளாடியில் ஹரி இறங்கி பெட்டிக் கடையில் சிகரெட் வாங்கியபடி விசாரித்தான்.

"நம்ம கிருஷ்ணசாமி ஐயா வீடுங்களா? நேராப் போய் லெஃப்டுல திரும்புங்க. பச்சைக்கலர் மர கேட் போட்ட வீடு."



ஈஸிசேரில் அமர்ந்திருந்தார் கிருஷ்ண சாமி, இஷ்டன் சொன்ன அத்தனை அடையாளங்களுடன்.

"யாரு நீங்க?"

"உங்களோட கொஞ்சம் தனியாய் பேசணும்?"

"இப்ப இங்கே நான் மட்டும்தான் இருக்கேன். உட்காருங்க."

மர பெஞ்சில் அமர்ந்த ஹரி, அவரை உற்றுப் பார்த்தான்.

ஏதோ ஒரு சோக இழை அவரிடம் தெரிந்தது.

"எதுக்கு ஆர்.கே.ஜுவல்லரி பற்றி அப்படி ஒரு போஸ்டரை ஒட்டினீங்க?"

அவர் திடுக்கிட்டுப் போய் அவனைப் பார்த்தார்.

"நீங்க போலீசா?"

"இல்லை. தனியார் டிடெக்டிவ் ஏஜன்சி."

அவர் சட்டென எழுந்தார். உள்ளே சென்றார். ஹரியும் பின் தொடர்ந்தான்.

ஹால் சுவரில் மாட்டியிருந்த ஒரு பெண்ணின் புகைப்படத்தினை வெறிக்கப் பார்த்தார்.

"இவ என் பொண்ணு. எட்டு மாசம் முன்னே கல்யாணமாச்சு."

திடீரென அவர் குலுங்கி அழ ஆரம்பித்தார்.

"அஞ்சு மாசம் முன்னே செத்துப் போயிட்டா."

ஹரி அதிர்ச்சியுடன் அவரைப் பார்த்தான்.

பெரியவர் தன்னை நிதானப்படுத்திக் கொண்டு ஹரியை நோக்கினார், வெறுமையாய்.

"அவ தற்கொலைக்குக் காரணம் ஆர்.கே. ஜுவல்லரியோட தரம் குறைஞ்ச நகைகள் தான்."

திடீரென அவர் முகம் கடுமையானது.

"அந்த முதலாளியைக் கொன்னு போடணும்னு வெறியே வருது எனக்கு. சம்பந்தி வீட்டுல எப்படிக் கேட்டுட்டாங்க தெரியுமா?"

ஹரி அவர் பேச்சில் குறுக்கிடாமல் கவனித்தான்.

"என் பையனுக்குப் போட்ட மோதிரம் இவ்வளவு சீக்கிரம் வெளுத்துப் போச்சே. போட்ட நகையெல்லாம் தங்கமா, இல்லை, பித்தளையான்னு கேட்டுட்டாங்க. பதினைஞ்சுபவுன் போட்டு, சீரும், சிறப்புமாய் என் ஒரே பொண்ணைக் கட்டிக் கொடுத்தேன் தெரியுமா?"

அவர் குரல் தழுதழுத்தது.

"என் பொண்ணு தங்கம்னு சொன்னீங்களே, போட்ட தங்க நகை பல்லை இளிச்சுடுச்சு, பொண்ணாவது ஒழுக்கமானவளா, இல்லை, அவளும்... னு சம்பந்தி இழுத்துப் பேசினாங்க பாருங்க, நாக்கைப் பிடுங்கிட்டு சாகலாம்னு நான் செய்ய நினைச்சதை, என் பொண்ணு செஞ்சுட்டா. அவ ரொம்ப சென்சிடிவ். சொல் பொறுக்காதவ. மனசுக்குள்ளேயே வைச்சு, பொருமி, கடைசியிலே..."

மீண்டும் அழ ஆரம்பித்து விட்டார். ஹரி அவரை அணைத்தபடி ஈஸிசேரில் கொண்டு போய் அமர வைத்தான்.

"ஜுவல்லரியிலே என்ன சொன்னாங்க?"

"எங்க நகைகள்லாம் இப்படி போகாது. ஏதாவது கெமிக்கலோ, ஆசிட்டோ பட்டிருக்கும். அதனாலேதான் வெளுத்துப் போயிருக்குன்னு சொல்லிட்டான் சார் அந்த முதலாளி சண்டாளன்! பதினைஞ்சு பவுனுக்கு திடீர்னு நான் எங்கே போவேன்? வாழாவெட்டியாயிடுவோம்ற பயத்துலயே என் பொண்ணு போயிட்டா போலிருக்கு. பாவி நான்! பணம் இல்லாத கொடுமையினாலே என் கண்மணியைப் பலி கொடுத்துட்டேன்."

அவர் பார்வை விட்டத்தை வெறித்தபடி இருந்தது. குரலில் கோடை வறட்சி.

"அதான்... வெறி வந்துடுச்சி. நான் ஒரு பிரிண்டிங் பிரெஸ் வெச்சிருக்கேன். கல்யாணப் பத்திரிகை அடிக்கறதுதான் மெயின் வேலை. என் பொண்ணு கல்யாணம் நாசமாய்ப் போன வெறுப்புலதான்..."

குலுங்கினார்.

"ஹரி, குட்மார்னிங்."

"குட்மார்னிங் பாஸ்."

"ஆர்.கே.ஜுவல்லரி கேஸ் என்னாச்சு? நாளைக்கு ரிசல்ட் கொடுக்கணும்."

"கரெக்ட் பாஸ்."

"குற்றவாளியைக் கண்டுபிடிச்சுட்டியா?"

"கண்டுபிடிச்சுட்டேன் பாஸ்."

"யாரு?"

"ஆர்.கே. ஜுவல்லரி முதலாளி சரவணன்!" என்றான் ஹரி.

**முதல் கட்டத் தேர்தலில் – குறிப்பாகச் சென்னையில் வோட்டுப் பதிவு சதவிகிதம் மிகவும் குறைந்திருக்கிறது. காரணம் என்ன? சென்னையில் வோட்டுப் போடாதவர்களைத் தேடிப் பிடித்துக் காரணம் கேட்டோம்...**

# இந்தத் தேர்தலில் வோட்டுப்

"எந்தக் கட்சி ரொம்ப ஒழுக்கமான கட்சி? அதுக்கு நான் வோட்டுப் போடாம மிஸ் பண்ணிட்டேன்னு சொல்லுங்க" என்று நம்மையே எதிர்க் கேள்வி கேட்டார் அயனாவரம் சேகர்.

வடபழனியிலுள்ள நூறடிச் சாலையில் கலைஞர் புகைப்படம் தொங்கும் டீக் கடைக்காரர் பழனிச்சாமியிடம், "வோட்டுப் போட்டீங்களா?" என்று கேட்டோம். "நான் வோட்டுப் போடறப்பெல்லாம் தலைவர் (கலைஞர்) தோத்துப் போயிட றாருங்க. 89-லே நான் வோட்டுப் போடல. நம்ம தலைவர் ஜெயிச்சார். 89-க்கு முன் னால நாலு தடவை வோட்டுப் போட்டிருக் கேன். ஆட்சியப் பிடிக்க முடியல. எல்லாமே தோல்விதான். 91-லே போடக் கூடாதுன்னு தான் இருந்தேன். ஏதோ ஒரு ஆசையில சூரியனுக்குக் குத்தினேன். ரொம்ப மோச மாத் தோத்துட்டோம். 96-ல வோட்டுப் போடலீங்க; ஜெயிச்சிட்டோம். அதனால இந்தத் தேர்தல்ல நான் வோட்டுப் போட லீங்க!" என்றார்.

"இப்படியே எல்லாரும் மூட நம்பிக்கை யால வோட்டுப் போடாம இருந்தா தலைவர் நல்லா ஜெயிப்பாருப்பா!" என்று கடையில் வேலை செய்யும் புரோட்டா மாஸ்டர் கிண்டல் அடித்தார்.

தபால் நிலையத்தில் வேலை பார்க்கும் முருகேசன், "ஞாயிற்றுக்கிழமை வார ரொட்டீன் லீவில என்னங்க த்ரில் இருக்கு? இந்த வாரம் எலக்ஷன் பேர்ல திங்கட் கிழமை லீவு வந்ததும் சந்தோஷமா இருந் திச்சு. வெயில்ல போயி நின்னு வோட்டுப் போட்டு என்ன ஆகப் போகுதுங்க? கம் முன்னு டீ.வி. பாத்துக்கிட்டு வீட்டுல படுத் துக்கிட்டேன்!" என்றார்.

"நம்ம நாட்டின் தலைவிதியை நிர்ணயிக் கிற எலக்ஷனுங்க?" என்று நாம் சொன்ன போது "ஜெயலலிதாவுக்கே வோட்டுப் போட இஷ்டமில்ல. அதப் போயி நீங்க ஏன்னு கேளுங்களேன், பார்க்கலாம்!" என்று நம்மை மடக்கினார்.

அவரிடமிருந்து ஓசைப்படாமல் நழுவி, அவசர அவசரமாக எம்.எம்.டி.ஏ. காலனி பஸ் ஸ்டாண்டிற்கு வந்தோம். பையைத் தூக்கிக் கொண்டு பஸ்ஸுக்காக வந்து நின்றார் ஒருவர். வயது முப்பத்தைந்து இருக் கும். பெயர் சொல்ல மறுத்து விட்டார். "இந்தத் தேர்தல்ல வோட்டுப் போட்டீங் களா?" என்றோம். பதில் பேசாது முகத்தைத் திருப்பிக் கொண்டார். அதே கேள்வியைக் கேட்டு அவரை சுத்திச் சுத்தி வந்தோம்.

"வோட்டுப் போடலீங்க!" என்று கொஞ் சம் எரிச்சலோடு சொன்னார். திரும்பவும் விடாமல் காரணம் கேட்டோம்.

"போட முடியாதுங்க. எதுக்குப் போட ணும்...? எனக்கு இஷ்டமில்லே. காரணமெல் லாம் சொல்ல முடியாதுங்க!" என்று கடு கடுத்தார்.

ராமகிருஷ்ணன் தி.மு.க. அனுதாபி. வடபழனிக்காரர். "சூரியனுக்குப் போட ணும்னு நெனச்சிருந்தேன். பூத் வரைக்கும் போனேன். வோட்டுப் போடவே மன சில்லை. வரிசையா நின்னுக்கிட்டிருந்தாங்க. யாருக்கு வோட்டுப் போட்டு என்னாகப் போகுது? ஜெயிச்சதும் அவனவனும் ஏதோ வானத்திலிருந்து குதிச்சது மாதிரி நடக்க



# போடாததேன்?

ஆரம்பிச்சிடுறான். அப்புறம் சொகுசா உக்காந்துக்கிட்டு மக்கள மதிக்க மாட்டேங்கிறான். மனசில என்னமோ தோணிச்சு. வோட்டுப் போடாம திரும்பி வந்துட்டேன்!'' என்றார்.

அவருடன் இருந்த தாமோதரனைக் கேட்டபோது, "இந்தத் தடவை அ.தி.மு.க.வுக்குப் போடணும்னு வெறி வந்திடுச்சு. ஏன்னா எங்களை தி.மு.க.வோ, த.மா.கா.வோ மதிக்கல. எங்கள போஸ்டர் ஒட்டுற எடுபிடின்னு நெனச்சுக்கிட்டாங்க. ஜெயலலிதா எங்க தலைவன் சூப்பர் ஸ்டாரை மோசமா பேசினாக்கூட அ.தி.மு.க.வுக்குப் போடலாம்னுதான் இருந்தேன். ஆனா... தலைவன் வந்ததும் பேட்டி கொடுத்தாரு. தலைவன் சொல்ல மீற முடியல. அதனால எந்தக் கட்சிக்கும் போடலீங்க!'' என்றார்.

**அ**ம்பத்தூரில் 'முரளி – வாணி' என்னும் இளம் தம்பதியரைப் பிடித்தோம். இருவருமே வோட்டுப் போடாதவர்கள். "இவரு தி.மு.க.வுக்குப் போடுன்னார். நான் ம.தி.மு.க.வுக்குப் போடுங்கன்னேன். வீட்டில் ஒரே சண்டை. ரெண்டு பேரும் யாருக்கும் போட வேணாம்னு ஒப்பந்தம் பண்ணிக்கிட்டோம். ஆனா இவரு என்னை ஏமாத்திட்டு வோட்டுப் போடப் போயிடுவாருன்னு தோணிச்சு. அதனால இவர எங்கயும் விடல. இரண்டு பேரும் 'காதலே நிம்மதி' படத்துக்குப் போயிட்டோம்'' என்றார் கணவரை சுட்டிக் காட்டியபடி!

மருந்துக் கடை வைத்திருப்பவர் ராமசாமி. வயது அறுபது. "காமராஜர் இறந்த பின்னாடி, நான் யாருக்கும் வோட்டுப் போடலைங்க. கட்சிக்காரங்க வந்து டொனேஷன் கேட்டா என்னால முடிஞ்சதக் கொடுத்திடுவேன். மத்தபடி எந்தக் கட்சிக்கும் இப்ப நான் வோட்டுப் போடுற தில்லை!'' என்றார்.

"**எ**ங்க என்ன நடக்கும்னே தெரியலங்க. எங்க வீட்டுக்காரர் வோட்டுப் போடணும்னுதான் பிரியமா இருந்தாரு. கோயம்புத்தூர்ல வெடிகுண்டு வெடிச்சதும் வோட்டுப் போட மனசில்லன்னுட்டாரு. உண்மையில எனக்கு வோட்டுப் போட ஆசைதாங்க. ஆனா பயமா இருந்திச்சு. அதனால போடலீங்க'' என்றார் லோகேஸ்வரி.

"என்னங்க இந்த பெரிய ரஜினிகாந்த்! இங்க என்ன நடந்ததுன்னுகூடத் தெரியாம கட்சிகாரங்கதான் பொறாமை பிடிச்சு கோயம்புத்தூரிலே குண்டு வச்சிருக்காங்கன்னு சொல்றாரு. இப்படியா பேசறது? தெய்வ நம்பிக்கை உள்ள ரஜினிகாந்த்கூட பொய் சொல்லணுமா? தீவிரவாத இயக்கத்துக்குக் கருணாநிதி மாதிரியே சப்பக்கட்டு கட்டுறாரு. கேவலமா இருக்குங்க. ரஜினி பேட்டிய பாத்த பின்னாடிதாங்க யாருக்கும் வோட்டுப் போடக் கூடாதுன்னு தோணிச்சு!'' என்று கொதித்துச் சொன்னார் தனியார் நிறுவனத்தில் பணிபுரியும் பரமேஸ்வரி.

சந்திப்பு : **சிக்கல் சிவராமன்**

## வட்டமேஜை

✉ இன்றைய கட்சிகளின் தேர்தல் அறிக்கை என்பது குழந்தைகளுக்கு 'லாலிபாப்' கொடுத்து செயினைப் பறித்துக் கொள்ளும் திருடர்களின் முயற்சியாகத் தான் இருக்கிறது. தேர்தல் அறிக்கைகளை அலசி, தெளிவாகச் சிந்திக்க வைத்த தலையங்கத்துக்கு சபாஷ்!
சுப்பராயர்புரம், மணிமதியண்ணன்

✉ அழுகிப்போய் புழு நெளியும் அளவுக்குக் கெட்டுப்போன 'ஜெ' எனும் ஊழல் தக்காளி, 'வெங்காயம் விலை ஏறிப்போச்சே' என்று கண்ணீர் வடிக்கும் காட்சியைக் கார்ட்டூன் வாயிலாக, அரசியல் சூடு பறக்க 'கமமெ'வெனத் தாளித்தது கனஜோர். வச்ச கண்ணை வாங்க முடியவில்லை போங்கள்!
பொறையாறு, கங்கா கணேசன்

# 'கமகம'வென ஒரு தாளிப்பு!

✉ கொங்குத் தமிழ், மதுரைத் தமிழ், சென்னைத் தமிழ் இவற்றைத் தொடர்ந்து 'சுவாமித் தமிழ்' ஒன்றும் இருப்பதை, மெரினா கூட்டம் பற்றிய கட்டுரையிலிருந்து தெரிந்து கொண்டேன்!
கமுதி, ராஜி

✉ 'தேர்தல் ஸ்பெஷல்-IV' பக்கத்துக்குப் பக்கம் விறுவிறுப்பாக இருந்தது. அதிலும் 'எஸ்.ஆர்.பி. பீல்டிலேயே இல்லை' என்ற பிரபுவின் பேட்டி சூப்பர்ச் சிரிப்பை வரவழைத்தது!
பொன்மலை, ஆர். பிரகாஷ்

✉ "வாசுதேவன் நாயரின் பேட்டி எளிமையாகவும் அதே நேரம் உண்மையானதாகவும் இருந்தது.
மதுரை-16, வி.பி.எம்.வள்ளி

✉ 'முன்றி'யின் லேட்டஸ்ட் கவிதை அரசியல்வாதிகளின் அவலட்சணங்களைத் தெளிவாக விளக்கியது.
சிதம்பரம்-1, ஸ்ரீவித்யா காளிதாஸ்

✉ மனித நேயத்திற்கும் மத நல்லிணக்கத்திற்கும் வித்திடும் அருமையான சிறுகதை நோன்பு. "மதத்தின் பேரால் ஏன் சார் படைச்சவனைக் கேவலப்படுத்தணும்" என்ற வரிகள் இன்றைய மதவெறியர்கள் மனத்தில் உறைக்க வேண்டிய சாட்டையடிகள்.
திருப்பரங்குன்றம், டி.கே.சுப்பிரமணியன்

✉ பார்த்திபனின் டெல்லி விசிட் பற்றி நீரும் ஒன்றும் தெரியாதது போல் கேட்க, அவரும் சொதப்பியிருந்தார். விரைவில் தமிழில் ஒரு இறக்குமதிப் படத்தை எதிர் பார்க்கலாம்.
சென்னை - 83, சி. மகேஷ்

✉ கல்கி கலெக்ஷனில் வெளியாகும், அமரர் கல்கியின் நகைச்சுவை இழையோடும் கட்டுரைகள் ஒவ்வொன்றும் படிக்கப் படிக்க பரவசமூட்டுபவையாய் அமைந்துள்ளன.
குடந்தை-1, ஜெ. பாபு

✉ ஜெ.வின் சென்னை பிரசாரம் பற்றிய கட்டுரை நேரில் பார்த்தது போன்ற பிரமையை உண்டு பண்ணியது. தேர்தல் ஸ்பெஷலில் அனைத்துக் கட்சியினருக்கும் சமபங்கு அளித்ததன் மூலம், கல்கி தம்மை ஒரு கட்சி சார்பற்ற பத்திரிக்கை என்பதை மீண்டும் நிரூபித்துள்ளது.
தூத்துக்குடி-1, ப. சுகுமார்

✉ காங்கிரஸ் தலைவர்களின் 'மன்னிக்க வேண்டுகிறோம்!' சம்பாஷணைகள் கற்பனையே என்றாலும் நிஜத்தையும் மிஞ்சிவிட்டன!
நெய்வேலி-3, க. சுதா

### உண்மை தெரியுமா!

✉ பி.ஜே.பி. ஆளும் மாநிலங்களில் மதக்கலவரங்கள் இல்லை என்பது உண்மைதான். ஆனால் அவர்கள் ஆளுவதால் தான் மதக்கலவரங்கள் இல்லை என்பது தான் மகா பெரிய உண்மை. ஆளும் கட்சியாக இல்லாவிட்டால் கலவரங்களைக் கிளப்பிவிடுவது தான் இவர்கள் வேலை! அவர்கள் ஆளும் மாகாணங்களில் எதிர்க்கட்சிகள் மதக்கலவரங்களைத் தூண்டுவதில்லை என்பதும் நிரூபணம் ஆகிவருகிறது.
சென்னை - 35, தி. சந்தானம்



• நேருவுடன் கை குலுக்கிறார் சி.எஸ்.

# சி.எஸ்ஸிடம் மன்னிப்புக் கேட்ட நேரு!

**மூத்த தலைவர் 'பாரத ரத்னா' சி. சுப்பிரமணியத்தின் மகன் ராஜசேகர் தமது தகப்பனாரைப் பற்றிச் சொன்னார்...**

● அப்பா, மகாராஷ்டிர ஆளுநராகப் பதவி ஏற்ற பிறகு, முதன் முதலாக நான் பம்பாய் சென்றேன். இரண்டு கார்களும், ஓர் உதவியாளரும் ராஜ்பவனிலிருந்து வந்து என்னை வரவேற்றனர். ஒரு காரில் என்னுடைய இரண்டு சூட்கேசுகளை வைத்து விட்டு உதவியாளர் உட்கார்ந்து கொண்டார். இன்னொரு காரில் நான் அமர, வண்டிகள் இரண்டும் ராஜ்பவன் போய்ச் சேர்ந்தன. உள்ளே போனவுடன் பிரம்மாண்டமான அறைகளில் பளீரென்று மின் விளக்குகள் எரிய ஜகஜ் ஜோதியாக இருந்தன. படுக்கை அறையைப் பார்த்தால் பிரமிப்பாக இருந்தது. அத்தனை விளக்குகள்! இரண்டாவது தடவை நான் பம்பாய் போனபோது, ஒரு காரும் ஒரு டிரைவரும் மட்டுமே வந்திருந்தனர். ராஜ்பவன் போய்ச் சேர்ந்ததும், எனக்கு ஒதுக்கப்பட்டிருந்த அறைக்குப் போகிற வழியில் விளக்குகளே இல்லை! என் அறையில் நுழைந்து விளக்கைப் போட வேண்டியிருந்தது. முந்தைய தடவைக்கும், இப்போதைக்கும் இருந்த வித்தியாசம் பளிச்செனத் தெரிந்தது. அப்பா இங்கேயும் சிக்கனத்தைக் கடைப்பிடிப்பதில் கறாராக இருக்கிறார் என்று புரிந்தது. ராஜ்பவன் செலவுகளை எப்படியெல்லாம் குறைக்கலாம் என்று, அன்றைய ஜனாதிபதி ஆர். வெங்கட்ராமனுக்கு ஒரு கடிதம் எழுதிப் போட்டு விட்டாராம்!

● அமெரிக்க அதிபர் லிண்டன் ஜான்சனுடன் பேச சி.எஸ். ஸுக்கு 20 நிமிடங்கள் ஒதுக்கப்பட்டிருந்தன. 10.30 மணிக்கு சி.எஸ். ஸுடன் பேச ஆரம்பித்த லிண்டன் ஜான்சனிடம் அவரது செயலர் சரியாக 10.45க்கு வந்து, அடுத்த நிகழ்ச்சி பற்றி நினைவுபடுத்தினார்– இன்னும் 5 நிமிடங்களில் பேட்டியை முடிக்க வேண்டும்! ஜான்சன் உடனே குறுக்கிட்டு, "இந்தியாவிலிருந்து வந்திருக்கும் இந்த இளைஞரிடம் பேசுவது சுவாரசியமாக இருக்கிறது இவரை வாஷிங்டனில் சுற்றிப் பார்க்க வேண்டிய இடங்களுக்கு அழைத்துப் போய்க் காண்பித்து விட்டு, மறுபடி 1.15 மணிக்கு இங்கே கொண்டுவந்து விட்டு விட ஏற்பாடு செய்யுங்கள்!" என்று சொல்லி விட்டார். பேட்டி பிறகு ஒரு மணி நேரத்துக்கும் மேலாகத் தொடர்ந்தது!

● நேருஜியிடம், இரும்பு-எஃகுத் துறை சம்பந்தப்பட்ட பைலை ஒருமுறை எடுத்துச் சென்றார் சி.எஸ். சி.எஸ். சொன்ன கருத்து நேருவுக்குப் பிடிக்கவில்லை. ஃபைலை வீசி எறிந்து விட்டார். சி.எஸ். பதற்றப்படாமல், "பிரதமர் அவர்களே, இதே மாதிரி ஃபைலை விசிறியடிக்க எனக்கும் அதிக நேரம் ஆகாது!" என்று புறப்பட்டார். நேரு அவரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு, "சுப்பிரமணியம், நான் தான் முன்கோபக்காரன் என்று நினைத்தேன். நீங்களும் அப்படித்தான் போலிருக்கிறது!" என்று சொல்லிச் சிரித்து விட்டார். ○

— சித்தார்த்

# "அக்டோபர் 21 தான் பொங்கல்!"

விஞ்ஞானிகளின் புகைப்படங்களை தோளில் சுமந்து கருத்தரங்குகளுக்கும், பள்ளிகளுக்கும் கொண்டு செல்லும் நபரைப் பார்த்திருக்கிறீர்களா? 1990-ஆம் ஆண்டிலிருந்து இப்படியொரு பணியை மனச்சாந்திக்காகச் செய்து வருபவர் இரா. மதிவாணன். இவர் அரக்கோணம் கேந்திரிய வித்தியாலயா பள்ளியில் வேலை பார்க்கிறார்.

"தினந்தினம் டிவி. முன்னாடி உக்காந்து நிகழ்ச்சிகளைப் பார்த்து மெய்மறக்கிறோம். ஒரு நொடியாவது 'லோகி பெயர்ட்' இல்லன்னா இன்னக்கி டீ.வி. பார்க்க முடியுமான்னு யோசிக்கிறதில்லை. பத்துமணி நேரத்தில் கண்டம் விட்டு கண்டம்தாவி இறங்க முடியுதுன்னா ரைட் சகோதரர்களால்தானே..." என்பதாகத்தான் இவர் பேச்சு தெறிக்கிறது. இவரது தலைக்குள் விஞ்ஞானிகளின் பெயர்கள் அனைத்தும் ஸ்டோர் ஆகியிருக்கின்றன. எந்த மூலையில் இருந்து கேட்டாலும் பதில் வருகிறது.

இதுவரை முப்பத்தைந்துமுறை விஞ்ஞானப் புகைப்படக் கண்காட்சிகளைப் பல இடங்களில் நடத்தியுள்ளார். நூறு சார்ட்கள் தான் கைவசம் இருக்கின்றன. விஞ்ஞானிகள் பற்றி 350 புத்தகங்கள் சேகரித்திருக்கிறார். தமிழ்நாடு அறிவியல் இயக்கம் 1995ல் முதல் பரிசு தந்து கௌரவித்திருக்கிறது. அதே போல் மதுரை காமராசர் பல்கலைக் கழகமும், ரோட்டரி சங்கமும் தொடர்ந்து மூன்றாண்டுகள் முதல் பரிசு தந்து பாராட்டியிருக்கிறது.

"அறிவியல் கண்காட்சியை முதல் முதல் துவக்கியபோது தெருக்காரர்கள் எல்லாம் என்னைப் பைத்தியக்காரன் என்று ஏளனம் செய்தார்கள். அதற்கெல்லாம் சங்கடப்படக்கூடாது என்று உற்சாகம் தந்தவர் என் மனைவி சுசிலாதான்" என்றார்.

பள்ளிகளில் பேசவோ, கண்காட்சி நடத்தவோ அழைத்தால் இவர் மட்டும் செல்வதில்லை. மனைவி, மகள் உமாமகேஸ்வரி, மகன்கள் கார்த்திகேயன், செந்தில் ஐவரும் குடும்பமாகச் சென்று பணியில் ஈடுபடுகின்றனர். புத்தகக் கண்காட்சி என்பது இவர்களைப் பொருத்த அளவில் குடும்பவிழா. அது மட்டுமல்ல, இவர்களுக்கு தீபாவளி, பொங்கல் எல்லாம் கொண்டாட்ட தினமல்ல. தாமஸ் ஆல்வா எடிசன் மின் விளக்கை எரிய வைத்த அக்டோபர் 21-ம் தேதிதான் பொங்கல் பண்டிகை! அன்றுதான் புத்தாடை உடுத்திக் கொள்கின்றனர்!



• கண்காட்சியில் மதிவாணன்

"நம்மிடம் அறிவியல் விழிப்புணர்ச்சி இல்லை. விஞ்ஞானிகளைத் துடைப்பத்திற்கு நிகராக மூலையில் போட்டுள்ளோம்" என்று வருத்தப்படுகிறார்.

"மனித இன வரலாற்றில் நிறைகுறைகள் கண்டிப்பாக இருந்திருக்கலாம். அதைக் காலங்காலமாகத் திருத்தி வந்துக்கிட்டிருக் குறவங்க விஞ்ஞானிகள்தான். ஆனா அந்த மேதைகள் வாழ்க்கையைப் படிச்சா கண்ணீர் வருது. அவ்வளவு ஏளனமும் கஷ்டமும் 'பட் டிருக்காங்க. அவங்க இல்லைன்னா இப்ப இருக்கிற வாழ்க்கை நிச்சயமா இல்லை. ஏற் கெனவே இருக்கிற தியரிகளை மறுத்தாத்தான் புதிய கண்டுபிடிப்பு வரும். இந்த விழிப் புணர்வை முதல்ல குழந்தைகளிடம் கொண்டு போனா என்னான்னு தோணிச்சு. அப்புறம் விஞ்ஞானிகள் எல்லாம் I.I.T. மாதிரி இன்ஸ்டிடியூட்டில் படிச்சு வந்தவங்க இல்லை. நம்மள மாதிரி சாதாரண குடும்பத்தில பிறந்த அபூர்வ மூளைக்காரங்கன்னு, பிள்ளைகளுக்கு சொல்லணும்னு தோணியதால இதை செய்யத் தொடங்கினேன்" என்கிறார்.

இவருடைய அறிவியல் கண்காட்சிகள் கொலு பொம்மைகளாக இல்லை. மாணவர்கள் ஆர்வமாகக் குறிப்பெடுத்துக் கொள்கின்றனர். கண்காட்சியின் வாசலில் "ஒருவருக்கு அறி வியலில் நாட்டம் வந்து விட்டால் அவரைத் தீய பழக்கங்கள் நெருங்க முடியாது. ஏனென் றால் அவருக்கு நேரம் போதாது", "அறிய உண்மைகளைக் கண்டுபிடிப்பவர்களே அறி வியல் அறிஞர்கள். அவர்கள் ஒட்டுமொத்த மனித இனத்திற்கே சொந்தமானவர்கள்" என்ற வாசகங்கள் வரவேற்பாகப் பனிச்சிடுகின்றன.

"தீபாவளி போனஸ் பணத்தை அப்படியே விஞ்ஞானிகள் சம்பந்தமான புஸ்தகங்கள் வாங்குறேன். மாணவர்கள் அறிவியல் சம்பந்த மான சந்தேகம் கேட்டால் பதில் சொல்றோம். என்னிடம் பணமில்லை. என்னால் இவர்கள் வாழ்ந்தார்கள் என்று சொல்லமட்டுமே முடிகிறது" என்கிறார்.

— சு. வேணுகோபால்

---

புதிதாக வந்து சேர்ந்த கிரேக்க அடிமைக்குத் தன்னைப் போலவே உருவம் இருப்பதைப் பார்த்த ரோமாபுரி அரசன், "உன் தாய் எப்பொழுதாவது ரோமாபுரிக்கு வந்திருக்கிறாளா?" என்று கிண்ட லும் கர்வமுமாகக் கேட்டான்.

அதற்கு அந்த அடிமை "இல்லை அரசே! என் தந்தைதான் ரோமாபுரிக்கு வந்திருக்கிறார்" என்று சிரித்துக் கொண்டே கூறினான்!

'புகழ்பெற்ற ஜோக்ஸ்' என்ற நூலிலிருந்து:
மலர் சூர்யா





"நம்ம மகளை பெண் பார்த்துட்டுப் போனவன் பத்திரிகை ஆபீஸ்ல வேலை பார்க்கிறவன்கிறதை நிரூபிச்சிட்டான்."

"என்னங்க எழுதிருக்கான்?"

"உங்கள் பெண்ணை மணக்க இயலாமைக்கு வருந்துகிறோம்; அதற்காக அவர் அழகில்லை என்று சொல்வதாக நினைக்க வேண்டாம்னு எழுதிருக்கான்!"

- சீர்காழி வி. ரேவதி

"அவர் பழைமையை மிகவும் போற்று கிறவர்."

"அடடே, அப்படியா?"

"பின்னே, பத்து வருஷமா ஒரே டுத் பிரஷ்ஷையே வச்சிருக்கார்னா பாருங் களேன்!"

– எல். கோபாலகிருஷ்ணன்



# ஒவ்வொரு மங்கையின் வெற்றிக்குப்பின்னால்
# ஒரு நிரந்தர சக்தி!
# சக்தி காஸ்.




ஒவ்வொரு மங்கைக்கும் தான் எடுத்து வைக்கும் ஒவ்வொரு அடியும் வெற்றிகரமானதாக இருக்கவேண்டும் என்ற எதிர்பார்ப்பு இயல்பானது. அதற்கு நேசக்கரம் நீட்டுகிறது ஒரு நிரந்தர சக்தி. அது தான் **சக்தி காஸ்**

இந்தியாவின் மிகப்பெரிய தனியார் துறை L.P.G. நிறுவனம் **சக்தி காஸ்**. இலட்சக்கணக்கான குடும்பங்களில், எல்லா நேரங்களிலும் உறுதுணையாக நின்று இல்லத்தரசிகளை **அன்னபூரணிகளாக** விளங்கச்செய்வது **சக்தி காஸ்**

உங்களுடைய இல்லத்தில் **சக்தி காஸ்** இருக்கிறது என்றால் உங்களிடம் எப்போதும் **நிரந்தர சக்தி** இருக்கிறது.




**தக்ஷிண் சக்தி**

- உடனடி இணைப்பு
- உடனடி ரீஃபில்
- அரசாங்க காஸ் விலைக்கு சமமாக ஆயுள் முழுவதும் ரீஃபில்கள் கொடுக்கப்படும்.
- இவை அனைத்தும் உங்களுக்கு ரு. 4,900/- க்கு மட்டுமே.

**ஜனதா சக்தி**

சக்தி காஸ் இணைப்பை ரு. 1,350/- க்குப் பெற ஒரு அரிய வாய்ப்பு.

- **அரசாங்க காஸ் விலைக்கு ஆயுள் முழுவதும் ரீஃபில்.**
- **தக்ஷின் சக்தி திட்டத்தில்** மட்டுமே.

## ஸ்ரீ சக்தி எல்.பி.ஜி லிமிடெட்

மண்டல அலுவலகம் : 5/1B, தேஸ் அபார்ட்மெண்ட்ஸ், 1வது மெயின் ரோடு,
கஸ்தூர்பாய் நகர், அடையார், சென்னை - 20. போன் : 4420970 போன்/ஃபேக்ஸ் : 4430678
தலைமை அலுவலகம் : வீனஸ் பிளாசா, ஹைதராபாத் - 16.
போன் : 869416/17/18/19. Fax : 040 814411.
ரீஜனல் ஆஃபீஸ் : 142, II மெயின், Ist ப்ளாக், RMV II ஸ்டேஜ்,
டாலர்ஸ் காலனி, பெங்களூர் - 94. போன்/ஃபேக்ஸ் : 080 3414490,3414491

**இந்தியாவின் மிகப்பெரிய தனியார் எல்.பி.ஜி. நிறுவனம்**

PERCEPT/H

# நடக்குமென்பார்,



**மேஷம்** : *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

கொஞ்ச நாளா பணத்தட்டுப்பாடு இருந்து வந்திருக்குமே? இப்ப, கொஞ்சம் கொஞ்சமா அந்த நிலைமை மாறி, கையில பணப் புழக்கம் இருக்கும்! வாக்கு சாதுர்யத்தினால கஷ்டமான காரியங்களைக் கூட சுலபமா சாதிச்சிப்பீங்க. உத்தியோக ரீதில சிலபேருக்கு லாபகரமான இட மாறுதல்களோ, பதவி உயர்வோ கூட இருக்கும். சினிமா துறைல இருக்கறவங்களுக்கு யோகமான வாரம். குடும்பத்துல பிரச்னைகள் ஓய்ந்து, அமைதி திரும்பும் நேரம் இது!



**ரிஷபம்** : *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோஹிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

கவனம், நிதானம், பதறாமை, இந்த மூணும் இப்ப உங்களுக்கு அவசியத் தேவை. குறிப்பா வர்த்தகத் துறை, ஏஜென்ஸி, காண்ட்ராக்ட் துறைகள்ல இருக்கறவங்க, ரொம்ப ரொம்ப கவனமா செயல்பட்டாத்தான் சமாளிக்க முடியும். நேரம் கொஞ்சம் நல்லா இல்லை. எதிலும் ஒரு மந்தத்தனம், வளர்ச்சியில் தேக்கம் – இதனால் மனச் சோர்வு இருக்கும். ரொம்பக் கஷ்டப்பட்டு உழைக்க வேண்டி இருக்கும்னாலும் அந்த உழைப்பு வீண் போகாதுங்கறதுதான் ஒரே ஆறுதல்! பெண்களுக்கும் கொஞ்சம் சுமாரான வாரம்தான். முக்கிய முடிவுகள் எதுன்னாலும் கொஞ்சம் தள்ளிப் போடுங்க.



**மிதுனம்** : *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

வீட்டுல சில சின்னச் சின்ன வசதிகள் பெருகப்போகிற சமயம் இது. வாஷிங் மெஷின், அல்ட்ரா கிரைண்டர் மாதிரி ஏதாவது உபயோகப் பொருள்கள் வாங்குவீங்க. பழைய நண்பர்கள், தொடர்பு விட்டுப் போன உறவினர்கள் சந்திப்பு சிலருக்கு ஏற்படலாம். திருமண முயற்சிகள் – பெண்களுக்கு மட்டும் - உடனே கை கூடும். கலைத்துறைல உள்ளவர்களுக்குக் கடுமையான அலைச்சல் இருக்கும். அரசியல்வாதிங்களுக்கு வெற்றிப் பாதைதான். சில வேண்டாத வம்பு வழக்குகள்ள மாட்டிட்டு கெட்ட பேர் வாங்கற 'யோகம்' சிலருக்கு இருக்கும்; ஜாக்கிரதையா இருங்க.

**கடகம்** : *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*



கொஞ்சம் முன்னெச்சரிக்கையோடும் ஜாக்கிரதை உணர்வோடும் இருக்கணுங்க. ஏன்னா, கிரக சஞ்சாரம் சரியா இல்லை. அதிகம் உணர்ச்சி வசப்பட்டு உடம்பைக் கெடுத்துக்காதீங்க. எதுக்குச் சொல்றேன்னா, நீங்க உணர்சிவசப்படறாப்பல காரியங்கள் நடக்கும்! உங்களோட எதிரிகள் கை ஓங்கியிருக்கிற சமயம் இது. ஆகவே, சாதுர்யமாத்தான் உங்க காரியங்களை சாதிச்சிக்கணும். உடல் நலம் கவனம்! பயணத்துல ரொம்ப கவனம். விபத்து சான்ஸ் இருக்குது. முயற்சிகள் தோல்வி அடைஞ்சா மனசு உடைஞ்சிடாதீங்க. எல்லாம் கொஞ்சநாள்தான். சீக்கிரம் காத்து உங்க பக்கம் வீசப் போவுது!



**சிம்மம்** : *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

பார்ட்டி, ஃபங்ஷன்னு கொஞ்சம் வெளி விசேஷங்கள்ல கலந்துக்க வேண்டி வரலாம். விருந்து சாப்பிட்டு, வயிற்றைக் கெடுத்துக்க, மருத்துவச் செலவு கூடுதலா ஆகும். அரசாங்க உத்தியோகஸ்தர்களுக்கு வளமான வாரம். சீரான வருமானம், போதுமான நிம்மதி, கொஞ்சம் குஷின்னு இந்த வாரம் பிரச்னை இல்லாம ஓடிடும். ஆனா, டூ-வீலர் வெச்சிருக்கறவங்களுக்குக் கொஞ்சம் செலவு கூடுதலாகும். வேறென்ன? வண்டி மக்கர் பண்ணி, கழுத்தறுக்கலாம். வியாபாரிகளுக்குத் தொழில்ல ஒரு நல்ல திருப்பம் இருக்கும். அரசியல்வாதிகளுக்கு, மறைமுக எதிரிகளால் தொல்லை இருக்கும். உழைப்புக்கு அஞ்சாதீங்க. இந்த வாரம் கஷ்டப்பட்டா அடுத்த வாரம் சுகப்படலாம்!



**கன்னி** : *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

தாராளமான பணப் புழக்கம் இருக்கப் போற வாரம் இது. அதனால சகட்டுமேனிக்கு செலவும் செய்வீங்க. கண்டபடி சாப்பிட்டு சிலர் உடம்பைக் கெடுத்துக்கலாம். வீட்டுல சில விசேஷங்கள் வரப்போவுது. அது குழந்தைப் பிறப்பாகவோ, திருமண ஏற்பாடாகவோ இருக்கலாம். அரசுப் பணியாளர்கள் எச்சரிக்கையா இல்லாட்டா, மேலதிகாரிகளோட அர்ச்சனைக்கு இலக்காக வேண்டி வரும்! முக்கிய முடிவுகள் எதுவானாலும் இந்த வாரம் அதைத் திருமதிகளுக்கு விட்டுடுங்க. குட்டி குட்டியா நிறைய பிரச்னைகள் சேர்ந்து, சிலருக்கு வரலாம். கவனம்! முடிஞ்சா ஒருநடை திருப்பதிக்குப் போயிட்டுவாங்க.



**துலாம்** : *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம் 3-ம் பாதம் வரை)*

திட்டமிட்டுச் செய்யற காரியங்கள் வெற்றியடையலாம். அவசரப்பட்டு எந்த முடிவும் எடுக்காதீங்க. தொழில் துறைல இருக்கறவங்களுக்கு இது சிறப்பான வாரம். உற்பத்திப் பெருக்கம், பணியாளர்கள் சின்ஸியரா வேலை பார்க்கறது, புதிய ஒப்பந்தங்கள்னு ஓஹோதான்! புதுசா

# நடக்கும்!

## அக்னிசர்மா பக்கம்

### பிப்ரவரி 25 முதல் மார்ச் 3 வரை

எதிலாவது முதலீடு செய்யறதுன்னாலும் இந்த வாரம் செய்யுங்க. அமோகமா இருக்கும். வேலை இல்லாத பட்டதாரி இளைஞர்களுக்கு இப்ப வெளிச்சம் புலப்படும். சுய தொழில் புலப்படும். மொத்தத்துல ரொம்ப நல்ல டயம் இது.



**விருச்சிகம் :** *(விசாகம் 4- ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

ஏதோ ஒரு பிரச்னை சம்பந்தமா மனக் குழப்பம் இருக்குது இல்லை? அதுக்கான தீர்வு இப்ப கிடைக்கும்! குடும்பத்துல இனம் புரியாத குழப்பம் - சிக்கல் ஏதாவது இருந்ததுன்னா, அதை உங்களோட சாமர்த்தியத்தால தீர்த்துடுவீங்க. உத்யோக ரீதில சீரான வளர்ச்சியும் தாராள பணக் கையிருப்பும் இருக்கும். சிலருக்குப் புண்ணியத் தலயாத்திரைக்கான வாய்ப்பு வரும். வயசானவங்க லேசா ஜுரம், தலைவலின்னு கஷ்டப்பட்டு, சீராவாங்க. அரசியல்வாதிகளின் மதிப்பு உயரும். உறுதியான முடிவெடுத்த பின் அதுலேருந்து பின் வாங்கறது மூலம் சிலபேருக்குக் கொஞ்சம் சங்கடங்கள் வரலாம். கவனம்!

**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

மூணாவது இடத்துல உலவற கிரகத்தோட பலத்தால துணிவும், தன்னம்பிக்கையும் பெறுகிற வாரம் இது! எந்தக் காரியம்னாலும் வெற்றி உங்களுக்குத்தான். பண விஷயத்தில் பிரச்னையே வராது! உத்தியோகஸ்தர்களுக்குப் பொறுப்பும் உழைப்பும் அதிகமாகும். அதற்கேற்ற பலன் இல்லாமல் போகாது. ஷேர், லாட்டரியில கூட சிலருக்கு லாபம் கிடைக்கலாம். சிலருக்குக் காதல் அனுபவங்கள், கைகூடும். அதனால உல்லாசம், சந்தோஷம், கொண்டாட்டம்தான்! அப்பா, அம்மா உடல் நலத்துல கவனமா இருங்க. சில பேருக்கு நீண்ட தூரப் பிரயாணங்கள் இருக்கலாம்.





மகர ராசிக்காரரான சூப்பர் ஸ்டார் ரஜினிக்கு புகழ், அந்தஸ்து எல்லாம் குப்புனு இன்னும் உசரப் போகுது! ஆனா நண்பர்களால சின்னத் தொந்தரவுகள் இருக்குமாம்! நட்பு நைந்து போகலாம்னு கிரக அமைப்பு சொல்லுது!



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

ஆரோக்கியம், கௌரவம் அந்தஸ்து மூணுமே குப்புனு உயரப் போகுது. குடும்பத்துல நல்ல காரியங்கள் ஏதாவது நடக்கும். பேச்சுல நிதானம் காட்டுங்க. அவசரப்பட்டு ஏதாவது பேசி பின்னர் வருத்தப்படாதீங்க. நண்பர்கள் விஷயத்தில எச்சரிக்கையா இருங்க. நேத்து வரைக்கும் உங்களை அனுசரிச்சிப் போனவங்க, இப்ப எதிர்க்கலாம்! சிலபேருக்கு வயிற்று வலி மாதிரி லேசான உபாதைகள் வரலாம். கொடுக்கல் வாங்கல் வேணாம். லாட்டரி, ரேஸ், ஷேர் பிஸினெஸெல்லாம் வேணவே வேணாம்!



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

அவசர புத்தி வேணாங்க. நிதானம்! நிதானம்! உங்களோட சின்னச் சின்ன பிழைகள் கூட பூதாகரமா உருவெடுக்கலாம். எதையும் ஒரு தடவைக்கு ரெண்டு தடவை யோசிச்சி செய்யுங்க. பண விஷயம் அத்தனை திருப்திகரமா இருக்காது. உடல் உழைப்பும் சிரமங்களும் கூட அதிகமாபடலாம்! ஆனா, உங்க புகழ் கூடிட்டே இருக்கும். வீட்டுல ஏதாவது சின்னச் சின்ன பிரச்னைகள் இருக்குமானால், விட்டுக் கொடுக்கறது மூலமா தீர்க்கலாம். ஈகோ பார்க்காதீங்க. எல்லாரையும் அனுசரிச்சி நடந்துக்கங்க. இந்த ராசிக்காரப் பெண்களுக்கு, புதிய பொருள்கள் வாங்கற யோகம் இப்ப இருக்கு!



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

விழிப்போட இருக்கணும் சார்! எதிலும் அலட்சியம் வேணாம். உங்க எதிரிகள் கண் கொத்திப் பாம்பு மாதிரி நீங்க எப்ப தப்புப் பண்ணுவீங்கன்னு ஆவலா காத்துட்டிருக்காங்க. சிறு சலசலப்புகளுக்கும் சண்டைக்கும் இடம் கொடுக்காதீங்க. பண வரவு அத்தனை நல்லா இல்லை. செலவும் கூடுதலாகும். கடன் வாங்காதீங்க. தண்டச் செலவு பண்ணாதீங்க. வெளிநாட்டுத் தொடர்பு இருந்ததுன்னா, அதன் மூலம் சிலருக்கு நல்லது நடக்கலாம். சில பேர் ஓட்டை வாயால உபத்திரவங்களை வலியத் தேடிப்பாங்க – குறிப்பா பெண்கள். பீ கேர்ஃபுல்!

பட்டுக்கோட்டை பிரபாகர்

# 8

**காதல் டைரிக்குறிப்பு**

**கண்களை மூடியும் 3D**
**எஃபெக்டில் உருவம்!**
**காதுகளை மூடியும் டிஜிடல்**
**எஃபெக்டில் குரல்!**
**எப்படிச் சாத்தியமிது? புரியாமல்**
**பிரமிக்கிறேன்.**

பிருந்தாவின் குரலில் பதற்றமும் அவசரமும் இருந்தது.

"உடனே பார்க்கணுமா? என்ன விஷயம்?" என்றான் அரவிந்த்.

சிகரெட்டைப் புகைத்தபடி அரவிந்தைப் பார்த்தான் சந்துரு.

"ஆமாம் மிஸ்டர் அரவிந்த். மேட்டரை நான் போன்ல சொல்ல விரும்பலை. என் போன் நம்பர் உங்களுக்குக் கொடுத்தேனே ஒழிய, உங்க நம்பர் எதுவும் நான் வாங்கிக்கலை. உங்களை எப்படி காண்டாக்ட் பண்றதுன்னு குழம்பிக்கிட்டிருந்தேன். நல்ல வேளையா நீங்களே போன் செய்துட்டிங்க. உங்களுக்கு அவசரமா ஏதாச்சும் வேலை இருக்கா? இன்னும் அரை மணி நேரத்தில நாம சந்திக்க முடியுமா சார்?"

"சந்திக்கலாம் பிருந்தா. நான் உங்க ஆபீஸுக்கு வரட்டுமா?"

"அது மரியாதை இல்லை. இப்ப நீங்க எங்க இருக்கீங்க?"

"வாஹினி ஸ்டுடியோல. இங்க என் ஃபிரண்டு ஒருத்தனைப் பார்க்க வந்தேன்.

"ஓ.கே. பக்கத்தில ஏதாச்சும் ஹோட்டல் இருக்கா?"

"இருக்கே. மௌரியா இண்டர் நேஷனல்!"

"அதோட ரிசப்ஷன்ல நீங்க வெய்ட் பண்ணுங்க. நான் உடனே எங்க ஆபீஸ் கார்ல வர்றேன். முக்கியமான மேட்டர் சார். நேர்ல சொல்றேன். எனக்காகக் காத்திருப்பீங்களா?"

"ஷ்யூர்" என்று செல்போனை மூடினான் அரவிந்த்.

"யாருடா அது பிருந்தா?" என்றான் சந்துரு.

"புதுசா அறிமுகம்." புன்னகைத்தான்.

"யாரு?"

"எங்கக்கா யாமினி வேலை பார்க்கறாளே ஒரு டயர் கம்பெனி. அதோட ஒரு ஏஜன்சில மானஜரா இருக்கா. என் அக்கா மூலமா அவளுக்கு ஒரு காரியம் ஆக வேண்டியிருக்கு."

"உனக்கு எப்படிப் பழக்கம்?"

அரவிந்த் தன் வாட்சைப் பார்த்துக் கொண்டான்.

"நிறைய சொல்லணும். நைட் உன் வீட்டுக்கு வர்றேன். அப்ப சொல்றேனே..."

அரவிந்த் எழுந்து கொண்டான்.

"ஏய், சாப்பிட்டுப் போடா."

"இல்லை. பிருந்தாவை வரச் சொல்லி

# நான் உன்னை சுவாசிக்கிறே



யிருக்கேன். அவளோட ஏதாச்சும் லைட்டா சாப்பிட்டுக்கறேன். வரட்டுமா?"

"ஐ கேன் ஸ்மெல் சம்திங்" என்று சிரித்தான் சந்துரு.

"நைட்டு சொல்றேன் சந்துரு" என்று நடந்தான் அரவிந்த்.

**ஹோ**ட்டல் ரிசப்ஷன் அலங்காரமாக இருந்தது. கண்ணாடிகளில் ஓவியங்கள் தீட்டப் பட்டிருந்தன. அழகான தொட்டிகளில் புதிய அழகிய மலர்கள் சிரித்தன. காற்றில் குளுமையும் நறுமணமும் நிரப்பப்பட்டிருந்தன. மெத்தென்ற சோபாவில் அமர்ந்திருந்த அரவிந்த் ஐந்து விநாடிகளுக்கு ஒரு முறை வாசலைப் பார்த்துக் கொண்டான்.

இன்றைக்கு பிருந்தா முக்கியமாக என்ன சொல்லப் போகிறாள் என்கிற செய்தி எதிர்பார்ப்பைவிட, என்ன நிறத்தில் சேலை உடுத்தி வருவாள் என்கிற எதிர்பார்ப்புதான் அதிகம் இருந்தது.

அவளுக்கான காத்திருப்பில், அவஸ்தையோடு இனிமையும் இருந்ததை உணர்ந்தான்.

அவளைப் பற்றிய நினைவுகள் மனதில் வீசும்போது, சொந்தப் பிரச்னைகளின் சுமை மறைந்து போவதையும் உணர்ந்தான்.

சமீப காலங்களில் இப்படி ஒரு தனிமை கிடைக்கும்போதெல்லாம் அவன் தன் எதிர் காலத் திட்டங்களைப் பற்றியும் அதற்கு அடுத்தடுத்துச் செய்ய வேண்டிய வேலைகளைப் பற்றியுமே நினைத்திருக்கிறான்.

இப்படி ஒரு பெண் எப்போது வருவாள், என்ன சேலையில் வருவாள், கூந்தலில் மலர் செருகியிருப்பாளா மாட்டாளா என்றெல்லாம் தவித்துப் போனதில்லை.

அரவிந்திற்கு சிகரெட் பிடிக்கும் உந்துதல் ஏற்பட்டது. அதை அவளுக்கு முன்பு செய்வதில் தயக்கம் இருந்ததால், அந்த வரவேற்பு ஹாலில் சற்றுத் தள்ளி ஒருவர் ஏற்கெனவே புகை பிடித்துக் கொண்டிருந்தாலும், நறுமணக் காற்றை மாசுப்படுத்த விரும்பாமல் வெளியே வந்து நின்று பற்ற வைத்துக் கொண்டான்.

> **இந்த வார (போட்டி – 5) பட்டுப்புடைவை பெறும் அதிர்ஷ்டசாலி!**
>
> **'டிராக்டர்' என்ற சிறுகதையில் வேண்டுமென்றே திணிக்கப்பட்டிருந்த 'ராவுக்கு சீட் இல்லை' என்ற வரியைச் சரியாகக் கண்டுபிடித்து 5–வது போட்டியில் வெற்றி பெற்றுப் பட்டுப்புடைவையை தட்டிச் செல்பவர் ஜி. சாவித்திரி, 1/578, வளையாபதி தெரு, முகப்பேர் (கிழக்கு), சென்னை–50.**
>
> **வாழ்த்துக்கள்!**

'அக்காவைப் பார்த்தாயா, பேசினாயா?' என்று கேட்பாள்.

என்ன சொல்வது?

அவனோடு மறுபடி பேச வேண்டும், பார்க்க வேண்டும் என்கிற ஆவலில் அவளுடைய வியாபாரப் பிரச்னையில் ஆர்வம் காட்டியாயிற்று. ஆனால் அதைப் பற்றி அக்காவிடம் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை.

இது... இது நியாயமே இல்லை. அசிங்கம்! நாடகத்தைப் பாதியில் நிறுத்தவும் முடியாது. உண்மையை அப்பட்டமாகச் சொன்னாலும் 'ச்சீ! அற்பப் புழுவே!' என்பதுபோல ஒரு பார்வை பார்த்துவிட்டுப் போய் விடுவாள். மேலும் மேலும் அவள் நம்பிக்கையை வளர்க்கும் விதமாகப் பொய் சொல்வது சரியா?

அரவிந்த் குழப்பமாகத் தன்னையே கேள்விகள் கேட்டுக் கொண்டு, ஆனால் விடை கிடைக்காமல் மீண்டும் உள்ளே வந்து அமர்ந்தான்.

பெரிய கண்ணாடித் தொட்டியில் அலையும் மீன்களைச் சற்று நேரம் கவனித்தான்.

இந்த மீன்களுக்குத் தெரியுமா அவற்றின் சுதந்தரத்துக்கு எல்லை கட்டப்பட்டிருப்பது? 'இவ்வளவுதான் உலகம் போலிருக்கிறது' என்றுதானே இவை நினைத்துக் கொண்டிருக்கும்?

வானம் முழுக்க சுதந்தரமாகப் பார்க்க வேண்டிய பறவைகளை அவற்றின் இறக்கைகளின் உபயோகத்தை மறக்கடித்து, கூண்டுச் சிறைகளில் அடைப்பது அநியாயமென்றால் தொட்டிக்குள் மீன்களை விடுவதும் அநியாயம்தானே?

யதேச்சையாகத் திரும்பியவன் கைகட்டியபடி அமைதியாக அருகில் நின்ற பிருந்தாவைப் பார்த்து, "எப்ப வந்தீங்க? ஏன் அமைதியா நின்னுட்டீங்க?" என்றான்.

இடைவெளி விட்டு சோபாவில் அமர்ந்த பிருந்தா சுரிதார் உடுத்தியிருந்தாள். மஞ்சள் உடைக்குப் பொருத்தமாக ஒற்றை மஞ்சள் ரோஜாவைக் கூந்தலில் செருகியிருந்தாள்.

"ரொம்ப ஆழ்ந்து மீனை ரசிச்சிட்டிருந்தீங்க. உங்க ரசனையைக் கலைக்க வேணாமேன்னு பேசாம இருந்தேன்" என்றாள்.

"வழக்கமா இந்த மாதிரி மீன்களை எந்தச் சிந்தனையுமில்லாம ரசிச்சிருக்கேன். இன்னிக்கு என்னவோ இப்படி ரசிக்கிறது சரியான்னு ஒரு சின்ன குற்ற உணர்ச்சி ஏற்பட்டது. அதான் யோசிச்சிட்டிருந்தேன்."

"இதில குற்ற உணர்ச்சி என்ன இருக்கு?"

"நாம பார்த்து ரசிக்கிறதுக்காகவா இந்த மீன்கள் பிறப்பு எடுத்துட்டு இருக்கு? இப்ப நீங்க அழகா இருக்கீங்க. உங்களைப் பார்த்து ரசிக்கணும்னு ஒரு பெரிய கண்ணாடி ரூமுக்குள்ளே சும்மா இப்படி அப்படி நடந்து போங்க, காசு தர்றோம்னு சொன்னா செய்வீங்களா?"

பிருந்தா வாய் விட்டுச் சிரித்தாள்.

"நான் மாட்டேன்" என்றாள்.

"மீனுக்கு சிந்திக்கத் தெரியாது, அதுக்குத் தன்மானம் கிடையாதுன்றதால இப்படி எக்ஸ்ப்ளாய்ட் பண்றமே. நாம ரசிக்கிறதுக்காக இதுங்க சிறைப்படணுமா? இயல்பா இல்லாம சுதந்தரத்தைப் பலி கொடுக்கணுமா?"

"நியாயம்தான். இந்த மீன்களாவது சுதந்தரத்தை மட்டும்தான் பலி கொடுக்குது. நம்ம நாக்கு ருசிக்காக எவ்வளவு மீன்கள் உயிரையே பலி கொடுக்குது. அப்படிப் பார்த்தா இந்த மீன்கள் கொஞ்சம் அதிர்ஷ்டம் செஞ்சிருக்குன்னு சொல்லலாம்."

அவள் சொன்ன அந்தக் கருத்து சட்டென்று அவனை உலுக்கியது.

தொட்டி மீன்களின் சுதந்தரமின்மைக்காகக் கவலைப்படுகிறவன் கடல் மீன்களின் உயிர்களுக்காகக் கவலைப் பட்டிருக்கிறேனா?

மீன் குழம்பு சாப்பிட்டிருக்கிறேனே சந்துருவுடன் சேர்ந்து. அப்போது அது உணவாகத்தானே தெரிந்தது. உயிராகத் தெரியவில்லையே.

"என்ன மௌனமாயிட்டீங்க?" என்றான்.

"நீங்க வெஜிடேரியனா? நான்-வெஜிடேரியனா?" என்றான்.

"வெஜிடேரியன். நீங்க லன்ச் சாப்டுட்டீங்களா?"

"இன்னும் இல்லை. நீங்க?"

"இல்லை. இங்கயே ரெஸ்ட்டாரெண்ட்ல சாப்பிட்டுக்கிட்டே பேசலாமா?"

"இந்தத் தடவை நான்தான் பில் கொடுப்பேன்."

"இந்தத் தடவையும் நான்தானே சந்திக்கக் கூப்பிட்டேன்?"

"யார் கூப்புடறாங்களோ, அவங்கதான் கொடுக்கணுமா? இது என்னங்க நியாயம்? சர்வருக்கு முன்னாடி சண்டை போடாதீங்க. நான் கொடுக்கறேன். வாங்க." எழுந்தான் அரவிந்த்.



சிவாஜி தந்த விளக்கம்!

தஞ்சையில் நடந்த பாராட்டு விழாவில் நடிகர் திலகம் சிவாஜி கணேசன் பேசினார்: "தமிழ்க்குடிமகன் பேசும்போது கோபத்தைக்கூட என்னைப் பார்த்துத்தான் தமது மனைவியிடம் காட்டியதாகக் கூறினார். ஆனால், என்னைப் பொறுத்தவரை என் மனைவி மீது காட்ட முடியாத கோபத்தைத்தான் சினிமாவில் காட்டினேன். இதிலிருந்து ஒன்றைப் புரிந்து கொள்ளலாம். சினிமாவில் நடிப்பது வேறு. பொது வாழ்வில் நடப்பது வேறு."

தகவல் :- அன்னை அன்பழகன்

மிக மெல்லிய வெளிச்சம் மேஜைக்கு மேஜை வட்டமடித்திருக்க... எதிரெதிரில் அமர்ந்து ஐஸ் வாட்டர் பருகினார்கள்.

அவன் அவளின் நிழல் வித்தை காட்டி ஜ்வலித்த அவன் முகத்தில் அழகையும் சேர்த்துப் பருகினான்.

சொல்லப்பட்ட பிஸ்ஸா வந்ததும், வெட்டிச் சாப்பிட்டபடி, "சொல்லுங்க பிருந்தா, என்கிட்ட முக்கியமாப் பேசணும்னு சொன்னீங்களே" என்றான் அரவிந்த்.

"சொல்றேன். உங்க சிஸ்டரை வீட்ல போய்ப் பார்த்துப் பேசப் போறதாச் சொன்னீங்களே, போனீங்களா சார்?"

அரவிந்த் அவசரமாகத் தண்ணீர் எடுத்துக் குடித்தான்.

"அக்காவா இருந்தாலும் போன் பண்ணிட்டுத்தான் போக முடியுங்க. பொறுப்பான பெரிய பதவியில இருக்காளே. ரெண்டு நாளா அவ ரொம்ப பிஸி. ஒருநாள் ஆஃபீஸ்லே டைரக்டர்ஸ் மீட்டிங்குன்னு சொன்னா. ஒருநாள் ஏதோ ரிசப்ஷனுக்குப் போறதாச் சொன்னா. இன்னிக்கு ஈவினிங் தான் ஃப்ரீயா இருக்கிறதாச் சொன்னா. ஈவினிங் பார்த்து உங்க விஷயமாப் பேசலாம்னு இருந்தேன்."

"எதுக்கு போன் செஞ்சீங்க?"

'உன் விலாச அட்டை பார்த்ததும் உன் முகம் மனதில் வந்தது. உன் முகம் மனதில் வந்ததும் உன்னோடு பேச, உன் குரலைக் கேட்க ஆசை வந்தது. அதனால் போன் செய்தேன்' என்று உண்மை சொல்ல விரும்பினான்.

இது சந்தர்ப்பமல்ல என்பதை உணர்ந்து, "இந்தத் தகவலைச் சொல்றதுக்காத்தான் கூப்பிட்டேன்" என்றான் சமாளிப்பாக.

"மிஸ்டர் அரவிந்த், உங்க சிஸ்டர் நல்லவங்களா?"

"கொஞ்சம் பணத் திமிர், பதவித் திமிர், நல்லபடியா வாழ்க்கை அமைஞ்சிட்ட திமிர் உண்டு. மத்தபடி நல்லவதான். ஏன்?"

"இவ்வளவு வெளிப்படையா உங்க சிஸ்டரைப் பத்தி நீங்களே விமர்சிக்கிறதால நான் சொல்லப் போற தகவல் உங்களுக்கு அதிர்ச்சியா இருக்காதுன்னு நினைக்கிறேன்."

"என்னங்க முன்னுரை பயங்கரமா இருக்கே."

"உங்க சிஸ்டர் ஆபீஸ்லேர்ந்து ஒரு பியூன் நேத்து எங்க ஆபீசுக்கு வந்து என்னைப் பார்த்தாரு."

"எதுக்கு?"

"தானா யதேச்சையா அந்தப் பக்கம் வந்ததாச் சொன்னாரு. எங்க ஏஜன்சியோட பிரச்னைக்கு அவரா ஒரு யோசனை சொல்ற மாதிரி சொல்லிட்டுப் போனாரு."

"என்ன யோசனை?"

"யாமினி மேடத்தோட வீட்ல ஒரு அம்பதாயிரத்தை பெட்டில போட்டுக்

கொடுத்தா உடனே காரியம் நடந்துட்டுப் போகுதுன்னு சொன்னாரு."

அரவிந்திற்கு நிஜமாகவே அதிர்ச்சியாக இருந்தது.

"உண்மையாவா சொல்றீங்க?"

"நான் எதுக்குப் பொய் சொல்லணும்?"

"யாமினி பத்தி நான் இப்படி இப்பத் தான் முதல்தடவையா கேள்விப் படறேங்க."

"எனக்கும் ஆச்சரியமாத்தான் இருந்திச்சு. நேர்ல பார்த்துப் பேசினப்போ ரூல்ஸ் அண்ட் ரெகுலேஷன்ஸ் பத்தி இரக்கமே இல்லாம ஸ்ட்ரிக்ட்டா பேசின அவங்களை காசு எதிர்பார்க்கறாங்கன்னு நம்பவே முடியலை."

"ஒருவேளை அந்த பியூன்..."

"நானும் விசாரிச்சுப் பார்த்துட்டேன். பியூன் ஏன் பொய் சொல்லணும்? நிச்சயமா உங்க ஸிஸ்டர் அந்தத் தகவலை சொல்லாம தொகை முதற்கொண்டு சொல்லிட்டுப் போவாரா?"

"டு பீ வெரி ஃப்ராங்க். இத்தனை நாளா நான் அரசாங்கம் சம்பந்தப்பட்ட நிறுவனங்கள்ல மட்டும்தான் இந்த லஞ்சத்துக்கு வாய்ப்பு இருக்கிறதா நினைச்சிட்டிருந்தேன்."

"இப்பல்லாம் வாய்ப்பை உருவாக்கிக்கறாங்க. இந்தத் தொகையை எதிர்பார்த்துத் தான் அவங்க நோட்டீசே அனுப்பிருப்பாங்களோன்னு இப்ப நான் சந்தேகப் படறேன்."

"இவ்வளவுக்கும் என் சிஸ்டருக்கு ரொம்ப நல்ல சம்பளங்க!"

"அதுக்கும் மீறிய தேவைகள் இருக்கலாம்."

"பங்களா கட்டிக்கிட்டிருக்கா."

"பார்த்தீங்களா!"

தன் சகோதரி பற்றிய இந்த கசப்பான தகவல் அவனை வருத்தப்பட வைத்தது. அவளைத் தலையால் தூக்கி வைத்துக் கொண்டு ஆடும் அப்பா, அம்மா மேல் எரிச்சல் வந்தது.

"எங்க எம்.டி.கிட்ட சொன்னேன். அவர் பணம் கொடுத்துக் காரியத்தை முடிக்க விருப்பப்படலை. ஏஜன்சி போனா போகட்டும்னு கோபமா சொல்லிட்டார். இப்ப நீங்க சொன்ன நம்பிக்கையான வார்த்தைகள் மட்டும்தான் எனக்கு இருக்கற ஒரே வழி."

சட்டென்று நிமிர்ந்த அரவிந்த், "ஒரு பைசா செலவில்லாம உங்க பிரச்னையைத் தீர்க்க வேண்டியது என் பொறுப்புங்க பிருந்தா!" என்றான் அழுத்தமாக...

– தொடரும்

# ஆஸ்தீக அன்பர்களுக்கு ஒரு வேண்டுகோள்
# ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம், காஞ்சிபுரம்

ஸ்ரீ ஆதி சங்கரரால் ஸ்ரீ சக்ர பிரதிஷ்டை செய்விக்கப்பட்டு பக்தர்களின் விருப்பங்களை கண்களாலேயே பூர்த்தி செய்பவளான ஸ்ரீ காஞ்சி காமகோடி காமாக்ஷி அம்பாளுக்கு பிரதி தினமும் காலை, மத்யானம், ஸாயரக்ஷை 3 வேளையும் நித்ய பூஜைகள் ஸ்ரீ மடத்தின் சார்பில் பக்தர்களிடமிருந்து நன்கொடைகள் பெறுவதன் மூலம் டிரஸ்டுகள் அமைக்கப் பெற்று நடந்து வருகிறது. காலை பூஜைக்கும், மாலை பூஜைக்கும் இன்னும் பல நாட்களுக்கு நன்கொடை யாளர்கள் (உபயதாரர்கள்) தேவைப்படுகிறார்கள்.

மத்தியான பூஜைக்குப் பிறகு தினந்தோறும் 100 யாத்ரீகர்களுக்கு அன்னதானம் செய்யப் படுகிறது. இந்த அன்னதானம் இந்த நூறுக்கும் மேற்பட்டவர்களுக்கு அளிக்க மேலும் உபய தாரர்கள் தேவைப்படுகிறார்கள்.

**நித்ய பூஜை ஒரு வேளைக்கு மூலதனம் ரூ. 5000/-**

**அன்னதானத்திற்கு ஒருவேளை மூலதனம் ரூ. 10,000/-**

ஆஸ்தீக அன்பர்கள் இந்த இரண்டு கைங்கர்யங்களுக்கும் நன்கொடை அளித்து ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமிகள் அனுக்ரஹத்திற்கும் ஸ்ரீ காமாக்ஷி அம்பாளின் கருணா கடாக்ஷத்திற்கும் பாத்திரர்களாகும்படி கேட்டுக் கொள்கிறோம்.

P. நீலகண்டன்
ஸ்ரீகார்யம் & ஏஜண்ட்

ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய ஸ்வாமிகள் ஸ்ரீ மடம்,
எண் 1, சாலை வீதி, காஞ்சிபுரம் - 631 502.

# பக்தர்களுக்கு ஒரு வேண்டுகோள்
# ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம், காஞ்சிபுரம்

பாரத நாட்டின் பல பகுதிகளிலிருந்தும், தமிழ் நாட்டின் எல்லா பகுதிகளிலிருந்தும், ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமிகளை தரிசிப்பதற்காகவும், கோவில்களை பார்ப்பதற்காகவும், தினந்தோறும் ஆயிரக்கணக்கானவர்கள் காஞ்சிபுரம் வருகிறார்கள். அப்படி வரும் பல யாத்ரீகர்கள் சில நாட்கள் தங்குவதற்கும் இடங்கள் தேவைப்படுகின்றன. திருப்பதி, காசி போன்ற க்ஷேத்திரங் களில் பக்தர்களின் நன்கொடையினால் கட்டிடங்கள் கட்டப்பட்டு யாத்ரீகர்கள் தங்குவதற்காக சௌகரியமான அறைகள் கட்டப்பட்டு உபயோகத்தில் இருந்து வருகின்றன. அதுபோல காஞ்சிபுரத்திலும் ஸ்ரீமடம் இடத்தில் பல ரூம்கள் கட்டப்பட இருக்கின்றன. ஒரு ரூம் கட்ட சுமார் ஒரு லட்சம் ஆகும். கொடுப்பவர்களின் பெயரும் விலாசமும் அந்த ரூம் வாசலில் பதிக்கப்படும். நன்கொடையாளர்கள் காஞ்சிபுரம் வந்தால் அவர்கள் தங்க வசதியாக இருக்கும். மற்ற சமயங்களில் யாத்ரீகர்கள் தங்கக் கொடுக்கப்படும். அறைகள் எல்லாம் ஸ்ரீமடம் கட்டுப் பாட்டில் இருக்கும்.

இந்த நல்ல பணிக்கு நன்கொடை அளித்து ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமிகள் அனுக்ரஹத்திற்கும் அன்னை ஸ்ரீ காமாக்ஷியின் அருளுக்கும் பாத்திரர்களாகும்படி கேட்டுக் கொள்கிறோம்.

P. நீலகண்டன்
ஸ்ரீகார்யம் & ஏஜண்ட்

ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய ஸ்வாமிகள் ஸ்ரீமடம்,
எண் 1, சாலை வீதி, காஞ்சிபுரம் - 631 502.



# தீவிரவாதிகளின் பகிரங்க சவால்

● ஜிகாத் கமிட்டியின் தலைவர் குணங்குடி ஹனீபாவும், அல்-உம்மா தலைவர் பாஷாவும் தங்களைப் பற்றிய செய்திகள் வந்தால், சம்பந்தப்பட்ட நிருபர்களை வரவழைத்தோ அல்லது நேரில் சந்தித்தோ தங்கள் தரப்பு "நியாயத்தை" புட்டுப் புட்டு வைத்திருக்கிறார்கள். 1997 நவம்பர் கடைசி வாரத்தில் நிருபர்கள் கூட்டம் ஒன்றில் "பாதுகாப்புக்காக" வைத்திருக்கும் விதவிதமான கத்திகளை ஹனீபா காட்டியிருக்கிறார்.

"எங்களை ஒன்றும் செய்ய முடியாது. எங்கள் மீது கை வைத்துப் பார்க்கட்டும். ஏராளமான குண்டுகள் ஸ்டாக் வைத்திருக்கிறோம்... தீபாவளி கொண்டாடி விடுவோம்" என்று பிரபல வார இதழ் ஒன்றின் செய்தியாளரிடம் ஜிகாத் கமிட்டி தலைவர் குணங்குடி ஹனீபா சவால் விட்டிருக்கிறார்.

● பிப்ரவரி 14-ஆம் தேதி திருச்சியில் வாஜ்பாயை (கடைசி நேரத்தில் வாஜ்பாய் வரவில்லை. அத்வானி வந்தார்) கொல்லச் சதி என்ற தகவல் பா.ஜ.க. வட்டாரங்களுக்குக் கிடைத்ததால் பாதுகாப்பு நடவடிக்கைகள் குறித்து திருச்சியில் தீவிரமான கவனம் செலுத்தியிருக்கிறார்கள். கோயம்புத்தூரிலிருந்து கவனத்தை திசை திருப்புவதற்காக முஸ்லீம் தீவிரவாதிகளே தங்கள் நெட்-ஓர்க் மூலம் தவறான தகவலை திட்டமிட்டுப் பரப்பியிருக்கிறார்கள் என்று சந்தேகிக்கப்படுகிறது.

● கோவையில் மனித வெடிகுண்டு நடமாட்டத்தை ஊர்ஜிதம் செய்யும் தகவல் ஒன்று: பொதுக் கூட்ட மேடை அருகே ஒரு அன்னாசி பழ வண்டியில் இருந்த வெடிகுண்டை போலீஸார் செயலிழக்கச் செய்தார்கள். அந்த வண்டியின் வியாபாரியாக நின்று கொண்டிருந்த ஒரு நபரிடம் சுந்தராபுரத்தைச் சேர்ந்த ராஜேந்திரன், பாலன் ஆகிய இருவரும் பேச்சுக் கொடுத்துக் கொண்டிருக்கும்போது முதல் குண்டு சத்தம் கேட்டிருக்கிறது. கொஞ்சம் தள்ளி நின்று கொண்டிருந்த ஒருவன் அன்னாசிப்பழ வண்டிக்காரனிடம் ஏதோ சைகை காட்டியிருக்கிறான். ராஜேந்திரனும் பாலனும் சந்தேகப்பட்டு அவனைத் துரத்திய சமயத்தில் மனித வெடிகுண்டு வெடித்ததில் அந்த மூன்று பேருமே பலியாகி விட்டார்கள் என்று இந்தக் கோரக் காட்சியை நேரில் பார்த்த ஒருவரிடமிருந்து தகவல் கிடைத்துள்ளது. சலூன் நிலையம் வைத்திருந்த பாலனுக்கு முதல் வகுப்பு படிக்கும் மகன் இருக்கிறான். மனைவி மனநிலை சரியில்லாதவர். ராஜேந்திரன் திருமணமாகாத இளைஞர். பலியான இந்த இருவரும் ஆர்.எஸ்.எஸ். ஊழியர்கள்.

● தி.மு.க. எம்.பி. மு. ராமநாதன், எம்.எல்.ஏ. சி.டி. தண்டபாணி இருவருக்கும் சிலர் குறிவைத்திருக்கிறார்கள் – முஸ்லீம் தீவிரவாதிகளுக்கு இவர்கள் பக்கபலமாக இருப்பதாக இந்துமத அமைப்புகள் சந்தேகப்படுவதால்.

● தொடர் குண்டு வெடித்த அந்தத் துயரமான சனிக்கிழமையன்று மதியம் செல்போனில் பேசிக் கொண்டிருந்த தி.மு.க. எம்.எல்.ஏ. தண்டபாணி, "பிரசாரத்தை எல்லாம் நிறுத்துங்கடா, குண்டுவெடிக்கப் போகுது" என்று சத்தம் போட்டாராம். அன்று மதியம் இரண்டரை மணிக்குப் பிறகு கோவைப் பகுதி முழுவதும் தி.மு.க. பிரசாரம் நிறுத்தப்பட்டதாகச் சொல்லப்படுகிறது. முதல் குண்டு வெடித்த நேரம் மாலை 3:50 மணி.

— நமது நிருபர்

# 'தேவதா குபேர உச்சாடனம்'
# ( பூஜா உபதேசம்)

அன்றைய ஆண்டவன் முதலானோரும் செய்து அரிய பெருமைகளை அடைந்த பூஜைகள்தான் உச்சாடனம். ஈரேழு பதினான்கு லோகங்களிலும் என்னை மீறிய செல்வந்தன் லக்ஷ்மிகடாக்ஷம் பெற்றவன் இருக்கக் கூடாது என்று குபேரன் செய்த உச்சாடன பூஜை இது. அதே குபேரன் வீட்டில் உள்ள லக்ஷ்மிகடாக்ஷம் பூரணமாய் பொங்கி வழிய வேண்டும் என்பதற்காக லங்கேஸ்வரன் ராவணனும் செய்த பூஜைதான் உச்சாடனம். இதனை எவர் செய்கின்ற இதயவலு, இணக்கமான ஜாதக அமைப்பு இயலுமான தீய பழக்கமற்ற தன்மைகள் படைத்திருக்கின்றாரோ அவர் குபேர செல்வத்தை இந்த உபதேசத்தால் அடைவது உறுதி. தொடர்ந்து ஒரு மணி நேரம் 2 மணி நேரம் பூஜையை செய்கின்ற வலுவும், எல்லையில்லா செல்வ நிலை அடைகின்ற துடிப்பும் இருக்க வேண்டும். எவர் ஒருவருக்கு இறைவனால் அவ்வித விதி அமைப்பு இடப்பட்டு இருக்கின்றதோ அவர் நிச்சயமாக இந்த பூஜா உபதேசம் பெறுகின்ற வாய்ப்பை அடைந்தே தீருவார். அவருக்குத்தான் இந்த விளம்பரம் கண்ணில்படும். உரிய காலத்தில் ஜாதக நகலுடன் விண்ணப்பித்துக் கொள்ளும் வாய்ப்பு ஏற்படும். இந்த அரிய பூஜை இன்றைய நிலையில் அறிந்தார் இல்லையோ என்று எண்ணும் அளவிற்கு அரிகிவிட்டனர். வேற்று கிரகங்களுக்கு விண்வெளி விமானங்கள் விடப்படும் இந்த நாளில் கூட எண்ணியதை ஈடேற்றிட எவ்வித உறுதியும் இல்லை. இந்த அரிய பூஜையால் கோடான கோடி செல்வம் கேட்கினும் உரியபடி செய்திட உடனே கிடைக்கும். அத்தகைய அரிய கலை ஒன்று தேய்ந்து மறைந்து விடலாகாது. உரியவர்கள் அறிந்து ஆண்டவன் அனுமதியோடு அற்புத குபேர சரித்திரம் படைக்க வேண்டும் என்பதற்காகவே இதனை வெளியிடுகின்றோம். உரிய 1.4.1998 தேதிக்குள் உங்கள் ஜாதக நகலுடன் விண்ணப்பம் செய்யுங்கள். தீய பழக்கங்களான– மதுபானம் செய்தல், புகைபிடித்தல், புகையிலைபோடுதல், பொடி போடுதல் இருக்கக் கூடாது. நல்லொழுக்கம் உடையவராயினும் தினசரி பூஜை செய்யும் பழக்கம் உள்ளவராயிருப்பினும்– ஜாதகநகலுடன் உரிய காலத்திற்குள் மனு செய்து கொள்ளுங்கள். அத்தேதி தவறி வரும் மனுக்கள் கவனிக்கப்படமாட்டாது. ஏனெனில் அவை கடவுள் அனுமதியற்றவை என்று பொருள். இப்பூஜா உபதேசம் பெற்று உயர்வு அடையும் விதி அமைப்பு உடையவராயின் உரிய தேதிக்குள் ஜாதக நகலுடன் மனுச் செய்து கொள் வார்.



பிரபல ஜோதிடர், ஜோதிட ஆசிரியர்,
ஸ்ரீமத் ஜெயவீர தேவா, யோகி,
பிளாட் எண்: 204, அண்ணாநகர்,
மதுரை–625 020.
தொலைபேசி: 533412, 534634

பரமாத்மாவே மருந்தாகவும் இருக்கிறான் என்று சொன்னேன். எப்படி என்று கேட்டால் அது பிரகலாதன் கதையிலே வருகிறது...

அந்த ஹிரண்ய கசிபு தன் பத்னியைக் கூப்பிட்டு, கார்கோடக சர்ப்பத்தின் விஷத்தை எடுத்துவரச் சொன்னான்!

கார்கோடக சர்ப்பத்தின் விஷத்திலே காற்றுப்பட்டு, அந்தக் காற்று நம்மீது பட்டாலே போதும்... பாம்பு கடிக்கவே வேண்டாம்... பிராணன் போய்விடும். அவ்வளவு கொடிய விஷம் அது!

ஆனால் நாமக்கல் என்கிற க்ஷேத்திரத்திலே பரமாத்மா சயனித்துக் கொண்டிருப்பதே இந்த கார்கோடக சர்ப்பத்தின் மேல்தான்! கார்கோடக சயனம்!

மாமல்லபுரத்திலே அவன் தரையிலேயே படுத்திருக்கிறான். அதனால் அவனுக்கு அங்கே ஸ்தலசயன பெருமாள் என்றே பெயர். இங்கே நாமக்கல்லிலே கார்கோடக சயனம்!



ஏனென்றால், அந்த சர்ப்பம் பிரார்த்தனை பண்ணி, தன் மீது படுத்துக் கொள்ளும்படி கேட்டுக் கொண்டதாம். ஆதலாலே விஷ சர்ப்பம் மேலே அவன் படுத்திருக்கிறான்.

அப்படிப்பட்ட பாம்பின் விஷத்தை எடுத்துக் கொண்டு வந்து குழந்தைக்குக் கொடுக்கச் சொன்னான் ஹிரண்ய கசிபு. குழந்தையின் அம்மா கயாது, நடுங்குகிறாள்! எப்படிக் கொடுப்பாள் தன் குழந்தைக்கு விஷத்தை?

"அம்மா! நீ ஏன் கவலைப்படுகிறாய்...? அப்பாவினுடைய ஆக்ஞையைக் கடைப் பிடிக்க வேண்டியது உன்னுடைய கடமை...."

# நைவையொன்றுமில்லை

என்கிறது குழந்தை!

"விஷத்தைக் கொடு எனக்கு. அது என்னை ஒன்றும் பண்ணாது" என்று விஷத்தைக் கையிலே வாங்கிக் கொண்ட குழந்தை, "அந்த பகவானே அந்தர்யாமியாய் எனக்குள்ளே எழுந்தருளியிருக்கும்போது, இந்த விஷம் என்ன பண்ணும்...?" என்றது.

"விஷமே எனக்குப் பத்தியமாகாதோ?" என்று அதை வாங்கி, 'நாராயணா' என்று சொல்லி கிடுகிடுவென்று பருகிவிட்டது குழந்தை.

நாமாம்ருதத்தினாலே குழந்தையைப் பரிபாலனம் பண்ணினான் பரமாத்மா. அந்தக் குழந்தை திடமாக நின்றது. விஷத்தையே அடிக்கும்படியான சக்தி பகவானின் நாமாம்ருதம்.

மருந்தும் அவனே; மருத்துவனும் அவனே!

**ந**ம் சரீரத்திலே சைவ ஜ்வரம், வைஷ்ணவ ஜ்வரம் என்று இரண்டு வகை இருக்கிறது. -இது விஷ்ணு புராணத்திலே வருகிற விஷயம்.

வைஷ்ணவ ஜ்வரம் என்றால் ஏதோ வைஷ்ணவர்களுக்கு வருகிற ஜ்வரம் என்று அர்த்தம் இல்லை. சைவ ஜ்வரம் என்றால் சிவ பக்தர்களுக்கு வருகிற ஜ்வரம் என்றும் அர்த்தம் இல்லை. பெயர்தான் அப்படி!

நம் உடலிலே 101 நாடிகள் இருக்கின்றன. அவற்றிலே சிகம்னா நாடி என்று சொல்லப்படுவது கபாலத்துக்கு நடுவிலே இருக்கிறது. உடலின் கீழ்ப் பாகத்திலே சில ஜ்வர நாடிகள் இருக்கின்றன. அவற்றிலே வைஷ்ணவ நாடி, சைவ நாடி என்று உண்டு. வைஷ்ணவ நாடி காரணமாக ஜ்வரம் ஏற்பட்டால் அதற்கு வைஷ்ணவ ஜ்வரம் என்று பெயர்; சைவ நாடி காரணமாக ஜ்வரம் ஏற்படுமானால் அதற்கு சைவ ஜ்வரம் என்று பெயர்.

இப்படிப்பட்ட ஏற்றமுடைய ஜ்வரங்களையெல்லாம் பரமாத்மா போக்கடித்து விடுகிறான்.

எப்படிப்பட்ட பெரிய ஜ்வரங்களாயிருந்தாலும், 'விஷ்ணு: விஷ்ணு: விஷ்ணு:' என்று மூன்று முறை சொன்னால், அந்த சப்தத்தினாலே அவை நிவ்ருத்தியாகி விடுகிறதாக பிரும்மாண்ட புராணத்திலே வருகிறது.

எப்படி 'ராம, ராம, ராம' என்று மும்முறை சொன்னால் அது சஹஸ்ரநாம துல்யமாகிறதோ அப்படியே விஷ்ணு என்று மும்முறை சொல்லி வெறும் தீர்த்தத்தைப் பருகினாலே ஜ்வரம் நிவ்ருத்தியாகிவிடும்.

சஹஸ்ரநாமம் என்று சொன்னாலே அது விஷ்ணு சஹஸ்ரநாமத்தைத்தான் குறிக்கும். இந்த சஹஸ்ரநாமத்துக்கு கேசவ சஹஸ்ரநாமம் என்றோ நாராயண சஹஸ்ரநாமம் என்றோ

முக்கூர்
லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

**47**

ஏன் பெயர் இல்லை...? விஷ்ணு சஹஸ்ர நாமம் என்று தானே பெயர்! அதனாலேயே தெரிந்து கொள்ள வேண்டும் விஷ்ணு சப்தத்தின் ஏற்றத்தை.

விஷ்ணு சஹஸ்ர நாமத்திலே வருகிற நாமாக்களைச் சொல்லி அர்ச்சனை பண்ணவேண்டும் என்று இன்னொரு இடத்திலே சொல்லியிருக்கிறது.

அப்படிப் பண்ணினால் என்ன ஆகிறது....?

ஹ்ருத் ரோகம்- ஹ்ருதய பலம் குறைந்து விடுவதால் ஏற்படுகிற ரோகம்- குணமாகிறது. இந்தக் காலத்திலே அந்த ஹ்ருத் ரோகமெல்லாம் சுலபமாகத் தெரிகிறது. பூர்வ காலத்திலே அப்படித் தெரியாது- இருந்தாலும் ஹ்ருத் ரோகத்துக்குக் குணம் சொல்லி வைத்திருக்கிறார்கள்.

அடுத்தபடியாக, புத்தியிலே தடுமாற்றம் என்கிற ரோகம்! ரொம்ப நாட்களாக சரியாக இருந்தவன், புத்தியிலே தடுமாற்றம் ஏற்பட்டு, இத்தனை நாளாகச் செய்யாமல் இருந்ததைச் செய்ய ஆரம்பிக்கிறான்.

-இந்தத் தடுமாற்றமெல்லாம் இடம் தெரியாமல் ஓடிப் போகச் செய்து விடும் விஷ்ணு சஹஸ்ரநாமம்.

இந்த விஷ்ணுவை ஸ்மரித்தால் பிரயோகாதிகள் நீங்கும்;

சரும வியாதிகள் மாயமாகும்;

நேத்திர ரோகம் நல்லபடியாக மாறும்...

-இப்படி சரீர-புத்தி சம்பந்தமானவை மட்டுமல்லாமல், மானசீகமான ஆதி வியாதி என்று சொல்வார்களே அதையும் போக்கும்.

அதென்ன ஆதி வியாதி...?

ஜன்மாந்திரத்தினாலே ஏற்படக் கூடிய பாபவிசேஷங்களினால் உண்டாகிற ரோகங்கள்.

சரீர வியாகூலங்கள், மனஸ் கஷ்டம்... இவையெல்லாம் சாதாரண வியாதி. இவற்றையும் போக்கி, ஆதி வியாதிகளையும் போக்கக் கூடியவன் விஷ்ணு.

அவனே விஜ்வர: என்ற சப்தத்தினால் சொல்லப்படுகிறவன். அவனுக்கு ஏது ரோகம்?!

அறிந்தன வேத அரும்பொருள் நூல்கள்
அறிந்தன கொள்க அரும்பொருள் ஆதல்
அறிந்தன ரெல்லாம் அரியை வணங்கி
அறிந்தனர் நோய்கள் அறுக்கும்
மருந்தே.

வேதங்கள் அறிந்தன; இதிஹாஸ புராணங்கள் அறிந்தன; ஞானிகள் உணர்ந்தனர்... யாரை உணர்ந்தனர்...? ஹரியை உணர்ந்தனர்! என்ன உணர்ந்தனர்? 'நோய்கள் அறுக்கும் மருந்து அவன்' என உணர்ந்தனர்.

நோய்களையெல்லாம் அறுத்தெறியக்கூடிய உயர்ந்த பிஷக்-மருந்து-அவன்.

இத்தனை தூரம் சொன்னதெல்லாம் சாமானியமான அர்த்தங்கள். திருப்பாவையை எடுத்துக் கொண்டோமானால் மேலெழுந்தவாரியாக ஓர் அர்த்தம் இருக்கும். அதன் உள்ளுக்குள் இருப்பதெல்லாம் உபநிஷத் அர்த்தம்:

நீராடப் போதுவீர் போதுமினோ
நேரிழையீர்

-எல்லாரும் மார்கழி நீராட்டத்துக்கு வாருங்கள் என்று ஆண்டாள் அழைக்கிறாள்.

ஆனால், அந்த திருப்பாவை முழுவதையும் படிக்கிறவர்களுக்குத் தெரியும்... அவள் மொத்த பேரையும் அழைத்துக் கொண்டு போய் நீர் நிலையிலே குளித்ததாகக் காணவே காணோம்!

'நீராட வாருங்கள்' என்று அழைத்து விட்டு எங்கேயாவது ஒரு குளத்திலே போய் குளித்தார்களா என்றால் இல்லை!

எங்கே போனார்கள்...?

நந்தகோபாலருடைய கிரஹத்துக்குப் போய், வரிசையாக ஒவ்வொருத்தராக

## அருள்வாக்கு

நாம் உட்கார்ந்திருக்கும் இந்தக் கொட்டகையை யார் போட்டார்கள் என்றால் சொல்லத் தெரிகிறது. இந்த வாழை மரத்தை யார் செய்தார்கள்? கண்ணில் காட்டும்படியாக அதைச் செய்தவனைச் சொல்லத் தெரியவில்லை. ஆனாலும் ஒருவன் அதைச் செய்திருக்கிறான். அதனால்தான் இப்படி அழகாகப் பட்டை பட்டையாகக் கணக்குப் பிசகாமல் உள்ளுக்குள்ளே அடுக்கிக் கொண்டே இந்த வாழை உண்டாயிருக்கிறது. எந்த ஆயுதத்தை வைத்துக் கொண்டு அந்த ஒருவன் இத்தனை அழகாகப் பட்டைகளை அடுக்கினான் என்றால் தெரியவில்லை. இப்படியே அந்த மலையை, இதோ மேலே உள்ள நட்சத்திரங்களை, சந்திரனைச் செய்தவனை நம்மால் காட்ட முடியவில்லை. 'இவையெல்லாம் எத்தனையோ காலம் முன்னால் உண்டானவை. செய்தவனை



எப்படிக் காட்டுவது?' என்று கேட்கலாம். சரி, இந்த ரோஜாப் புஷ்பம் இருக்கிறதே இது அந்த வாழையைவிடச் சமீபத்தில் உண்டானதுதான். முந்தாநாள் சிறு மொட்டாக இருந்தது. இப்போது அழகிய பூவாகியிருக்கிறது. இதில் நூற்றுக்கணக்கான இதழ்கள். ஒவ்வொன்றிலும் நுண்ணிய நரம்புகள், வாசனை எல்லாம் வந்திருக்கின்றன. நம் கண் முன்னேயே இது மலர்ந்தது. ஆனாலும் மலர்த்தினவனை நமக்குத் தெரியவில்லை.

மனிதன் எல்லாம் தெரிந்த கெட்டிக்காரன் என்று நினைத்துக் கொண்டிருக்கிறோம். ஆனால் ஒரு காட்டு மிருகம் சென்னைப் பட்டணத்தைச் சுற்றி வந்தால் எதுவுமே தனக்குத் தெரியவில்லை என்று எப்படி ஆச்சரியப்பட்டுப் பார்க்குமோ, அப்படித்தான் இந்தப் பிரபஞ்சத்தில் நாம் இருந்து கொண்டிருக்கிறோம். மனிதனை விடக் கெட்டிக்காரனான ஒருவன் அவனை இப்படி வைத்திருக்கிறான்.

கெட்டிக்காரன் என்று தன்னை நினைத்துக் கொண்டிருக்கும் மனிதன், இத்தனையையும் இவனையும் செய்த அந்த மகா கெட்டிக்காரனைத் தெரிந்து கொள்ள வேண்டும். ஏனெனில் அவன் மகா கெட்டிக்காரன் மட்டுமல்ல; மகா நல்லவனுங்கூட. இத்தனையைத் திட்டமிட்டுப் படைத்த பேரறிவு என்பதோடு இத்தனையையும் ரட்சிக்கும் பெரும் கருணையும் அவன். நமது கெட்டிக்காரத்தனம் அவன் தந்ததே என்று தெரிந்து கொண்டு அவனிடம் பிரார்த்தித்துக் கொண்டால் நமக்கு அவன் நல்லது செய்வான்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**

எழுப்பி, கடைசியில் பகவானை எழுப்பி, அவனிடத்திலே ஆத்ம சமர்ப்பணம் பண்ணுகிறார்கள்.

ஆக, நீராட்டம் என்றால் என்ன...? பணிந்து குடைந்து எதிலே நீராடுகிறார்கள்...?

'ஆழியான் என்னும் ஆழ மோழையுள்' நீராடுகிறார்கள்.

ஆழ மோழை என்றால் ஆழமான பெரிய மடு. அதற்குள்ளே பணிந்து, குடைந்து நீராட வேண்டும். ஆழியான் சங்கு ஏந்திய பெருமாள்.

'தயரதன் பெற்ற மரகத மணித்தடம்' என்று ஸ்ரீராமனைச் சொல்லியிருக்கிறது. தசரதனுடைய திருக்குமாரனாக, அழகான தடாகம் போல் காட்சியளிக்கிறான் பரமாத்மா.

'ஹரியாகிற குளத்திலே நீராடி' என்கிறார் குலசேகர ஆழ்வார்.

ஆக, பகவத் குணத்திலே நீராடுவதைத்தான் நீராட்டம் என்றது. ஆண்டாள் சொன்ன நீராட்டம் இதுதான்– பகவத் குணத்திலே மூழ்குதல்!

அதேபோல்தான் விஷ்ணு மருந்தாய் இருக்கிறான் என்றும் உயர்ந்த மருத்துவனாய் இருக்கிறான் என்றும் சொன்னால், வெறும் சரீர ரோகம் மட்டுமின்றி ஆத்மாவின் ரோகங்களுக்கெல்லாம் அவன் மருத்துவனாகவும் மருந்தாகவும் இருக்கிறான்.

ஆத்மாவின் ரோகம் என்பது என்ன...?

மறுபடியும் மறுபடியும் பிறத்தல்... எத்தனையெத்தனை ஜன்மாக்கள் உண்டோ எத்தனையெத்தனை ஜந்துக்கள் உண்டோ அத்தனையத்தனையும் இந்த ஆத்மா அடைந்து கொண்டேயிருக்கிறது.

'புனரபி ஜனனம் புனரபி மரணம்' என்றார் ஆதிசங்கரர். 'புனரபி ஜனனீ ஜடரே சயனம்!'– ஏன் அதைச் சொல்கிறார் என்றால், கர்ப்பத்திலே இருக்கிற சிசு, சொல்லமுடியாத அவஸ்தைகளை அனுபவிக்கிறதாம்!

அப்போது மாதாவினுடைய ஹ்ருதயத்திலே அந்தர்யாமியாய் உட்கார்ந்து கொண்டிருக்கிறான் பாருங்கள்... அவனைப் பார்க்கிறது அது. தன்னுடைய ஹ்ருதயத்திலேயும் அந்த பரமாத்மா உட்கார்ந்திருப்பதை அந்தக் குழந்தை பார்க்கிறது.

பார்த்தவுடனே அந்த எம்பெருமானிடம் பேசுகிறது அது:

'என்னை இந்த மாதிரி இப்படிப் பிடித்துத் தள்ளிவிட்டாயே..! நான் மறுபடியும் போய் பூலோகத்தில் பிறக்க வேண்டுமா..? உன்னிடத்திலே எப்போது வந்து சேருவேன்...?'

அந்தர்யாமியாய் உட்கார்ந்திருக்கிற பகவான் அதற்குப் பதில் சொல்கிறான்...

(தொடரும்)




# தேர்தலைச் சுலபமாக்கும் கம்ப்யூட்டர்!

முன்பொருமுறை கேரளாவில் நடந்த பொதுத் தேர்தலில் - பறவூர் தொகுதியில் - வாக்குப் பதிவுக் கருவிகள் பயன்படுத்தப்பட்டது நினைவிருக்கலாம். ஆனால் பொதுமக்களில் கணிசமானவர்களுக்கு - முக்கியமாக படிப்பறிவு அதிகம் இல்லாதவர்களுக்கு - இந்தக் கருவியைப் பயன்படுத்துவதில் ஒருவித தயக்கம் இருந்ததாலோ என்னவோ அதற்குப் பிறகு இப்படிப்பட்ட முயற்சிகள் பொதுத் தேர்தலில் பரவலாக்கப்படவில்லை.

"அது ஹார்டுவேர் சமாச்சாரம். நாங்கள் உருவாக்கியிருப்பது மென்பொருள் வகை. பழைய வாக்குப் பதிவுக் கருவியோடு ஒப்பிட்டால், இதன் விலை மிகக் குறைவு" என்கிறார் பிரகாஷ். சென்னையிலுள்ள இவரது அமைப்பான பிரகாஷ் பிஸினஸ் ஸாஃப்ட்வேர் கன்ஸல்டன்ஸியில் "ஈ-போல்" என்ற ஒரு மென்பொருளை உருவாக்கியிருக்கிறார்கள். இந்த முறையில் ரகசிய வாக்கெடுப்பு சாத்தியம் என்பதோடு, தமது வோட்டு சரியான முறையில் பதிவாகி உள்ளதா என்பதைத் தேர்தல் முடிவு அறிவிக்கப்பட்ட பிறகும் கூட வாக்காளர் உறுதிசெய்து கொள்ள முடியும்.

குறிப்பிட்ட கம்ப்யூட்டர் டெர்மினலில் ஏதாவது ஐந்து இலக்கங்களை (எழுத்து அல்லது எண்) உங்கள் சங்கேத வார்த்தையாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். அதை பட்டனில் தட்டியவுடன் திரையில் வேட்பாளர்களின் பெயர்களும், அவர்களது சின்னங்களும் காட்சி அளிக்கும். எந்த வேட்பாளரின் பெயரைத் 'தொடுகிறோமோ' அவருக்கு ஆதரவாக உங்கள் வாக்கு பதிவாகி விடும் - "நிச்சயமாக இது தான் உங்கள் முடிவா?" என்று கம்ப்யூட்டர் திரை கேட்கும் கேள்விக்கும் நீங்கள் "ஆமாம்" என்று பதிலளித்தால்! எந்த வேட்பாளருக்கு ஆதரவாகவும் வோட்டுப் போட உங்களுக்கு மனமில்லை என்றால் "யாரும் இல்லை" (None) என்ற பகுதியைத் தொடலாம்.

இப்படி கடைசி வாக்காளரும் தனது வாக்கை பதிவுசெய்த பிறகு, தேர்தல் அதிகாரி வாக்குப் பதிவு முடிந்ததற்கு அடையாளமாக ஒரு பொத்தானை அமுக்குவார். அடுத்த நொடியே, எந்த வேட்பாளர் அதிக வோட்டுப் பெற்றிருக்கிறார், ஒவ்வொரு வேட்பாளரும் பெற்ற வாக்குகளின் எண்ணிக்கை மற்றும் அதன் சதவீதம் என்று எல்லாமே திரையில் துல்லியமாகத் தெரியும்.

"தேசிய அளவில் இதை நடைமுறைப்படுத்த நாளாகலாம்; வேறு சில மாறுதல்களும் தேவைப்படலாம். 'இப்போதைக்கு பல்வேறு க்ளப்கள், யூனியன்கள், தனியார் நிறுவனங்கள் போன்றவற்றில் இதைப் பயன்படுத்துவது உகந்ததாக இருக்கும்" என்கிறார் பிரகாஷ். ●

— குல்லூ

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager : 2345623; Subscription and Advertisement : 2345622; Chief Administrative Officer : 2345621.
Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1600/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 800/- (Air Mail)

# தொண்டைக் கரகரப்பா?





## கிர்ர்ர்ர்ர்        முழுங்கணும்.





ஆம். நன்கு கொப்பளித்து, பின்பு முழுங்கவும்.

அறிமுகம் ஸ்மைல். இது ஒப்பற்ற ஆயுர்வேத இரட்டை ஆற்றல் கொண்ட ஸோர் த்ரோட் ரிலீவர். இது கொப்பளித்து, விழுங்கிய உடனேயே சிறந்த ஆற்றல் அளிக்கும்.

ஸ்மைலைக் கொப்பளிப்பதால் உங்கள் தொண்டை இளகுவதோடு எரிச்சலைக் குறைத்து மற்றும் தொற்று நோய் பாதிப்பு உள்ளதா-வென்றும் சோதிக்கிறது. ஸ்மைலை விழுங்குவதால், உங்களுடைய அடித் தொண்டைக்கு இதமும், நீண்ட நேர பாதுகாப்பும், சுகமும் அளிக்கிறது. வேறெதுவும் தர முடியாத தொண்டைக் கரகரப்பிலிருந்து விடுதலையை, ஸ்மைல் இரட்டை ஆற்றலுடன் செயல்பட்டு ஆறுதல் அளிக்கிறது. ஸ்மைல், உடனடி நீடித்த ஆறுதலுக்கு.

Sore Throat Reliever

Smyle

Kopran

ஸ்மைல் பிரபல மருந்துக் கடைகளில் கிடைக்கிறது.

தொண்டைக்கரகரப்பிலிருந்து விடுதலையுடன் இதமுமளிக்கும்.

ENTERPRISE NEXUS 2866 TM

